

## புதிய இந்திய கட்டிடம், லண்டன்.

லண்டனில் இந்திய ஹை கமிஷனர் நிர்வாக விஷயத்திற்காக அமைக்க உத்தேசித்த கட்டிட பிளான்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 13 | விபவஹூ வைகாசிமீ கஉ | 1928ஹூ மேமீ 14உ | பகுதி 11

## கடவுள் வணக்கம்.

மண்ணாதி யைந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சுரோத்ராதி யும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னுசுத் தாதி யுடனே
தொண்ணூற்றொ டாறுமற் றுள்ளனவு மௌனியாய்ச்
சொன்னவொரு சொற் கொண்டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல்லு வேன்
பண்ணாரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்று தவறாப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகை கூப்பிக்
கண்ணாறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சி யுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே. (1)

அன்றுநால் வருக்கு மொளிநெறி காட்டு
மன்புடைச் சோதியே செம்பொன்
மன்றுண்மூக் கண்ணுங் காளகண் டமுமாய்
வயங்கிய வானமே யென்னுள்
துன்றுகூ திருளைத் துரந்திடு மதியே
துன்பமு மின்பமு மாகி
நின்றவா தனையைக் கடந்தவர் நினைவே
நேசமே நின்பரம் யானே. (2)

எத்திக்குந் தானாகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. "இராகத்தோடு பாடி நின்னைத் துதித்து, மனமுருகிப் பணிந்தெழுந்து கைகளைக் குவித்துக் கண்ணீர் கரைபுரண்டோட நின்ற அன்பரைக் கைவிடாத துணையே! கருதரிய........கடவுளே! நீர் மௌன குருவாகிவந்து உபதேசித்த ஒரு மொழியை உட்கொண்ட அளவிலே, மண் முதலாகிய பஞ்சபூதங்களும், புறக்கருவிகளும், வாக்கு முதலானவைகளும், சுரோத்திர முதலானவைகளும், சப்தமுதலான விஷயங்களும், அந்தக்கரணங்களும், கலை முதலானவைகளும், சுத்ததத்துவங்களும் ஆகிய இவற்றுடனே பிறவுங்கூடிய தொண்ணூற்றாறு தத்துவங்களும் பரிசுத்தமான ஆகாயமாகி இடைவிடாத இன்பசுகசாகரம் தோன்றும்; அந்த அற்புதத்தை என் சொல்லுவேன்" என்பது இதன்கருத்து. கடவுள் மௌனகுருவாகி ஞானோபதேசஞ் செய்தமாத்திரத்தில் உண்டாம் பயனை இதில் விளக்கினார் ஆசிரியர்.

பஞ்சபூதங்கள்: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. வாக்கு முதலானவை: வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்களைந்தும். சுரோத்திர முதலானவை: சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்ராணம் என்னும் ஞானேந்திரியங்களைந்துமாம். சப்தமுதலான விஷயங்கள்: சப்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்னும் தன்மாத்திரையைந்தும். அந்தக்கரணங்கள்: மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. கலை முதலானவைகள்: காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்னும் வித்தியாதத்துவமேழும். சுத்ததத்துவங்கள்: சுத்தவித்தை, ஈச்சுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் ஐந்துமாம். புறக்கருவிகளும், மற்றுமுள்ளனவும் இவையல்லாதனவாகிய பிறவாம். அவற்றின் விவரங்களைச் சித்தாந்தக்கட்டளை முதலிய நூல்களிற் காண்க.

சுரோத்திரம்=செவி. சுகவாரி=இன்பக்கடல். பண்=இராகம். அருட்பான்மைநெறி=அருளின் தன்மையைக் காட்டும்வழி. பக்குவவிசேஷர்=தீவிரதரபக்குவர்கள்.

2. இதில், ஆசிரியர் நடராஜமூர்த்தியாகிய கடவுளை விளித்து, 'பகவானே! நான் உன்னைச் சார்ந்தவன்' என்று கூறுகிறார். நால்வர்—சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் முனிவர்கள். இவர்களுக்குச் சிவபெருமான் ஒருகாலத்தில் பிரகாசமான முத்திநெறியைக் காட்டியருளினர்.

ஒளிநெறி=பிரகாசமான முத்திமார்க்கம். செம்பொன்மன்று=தில்லையிலுள்ள கனகசபை. துன்று=நெருங்கிய. கூர்=மிகுந்த. தூரந்திடல்=நீக்கல். 'வானமே' என்றது=சிற்றம்பலத்திலுள்ள இரகசியத்தை.

3. கடவுள் எங்கும் வியாபகராய்த் தம்முள்ளத்திலும் நின்று ஆனந்தத்தை விளைவிக்கும் நிலையினை இதில் விளக்கினார் ஆசிரியர். ஈசுரத்தியானமானது உண்மையடியார்களுக்குத் தேனைப்போன்றினிமை செய்யக்கூடியதாயிருக்குமாதலின், அத்தியான வடிவமான கடவுளை, "தித்திக்கு மானந்தத் தேனே" என்றார்.

பராபரம்=மேலான கடவுள்.




## ஏழ்மையை நீக்குவதெப்படி?

உலகில் (1) மன்னர் ஆட்சி, (2) மன்னர்-குடியாட்சி, (3) குடியாட்சி, (4) ஏழையாட்சி என நான்கு விதமான ஆட்சிகள் நடைபெறுகின்றன. அவற்றில் கடைசியாட்சி நிகழும் நாட்டில் தான் குடிகள் சந்தோஷமாக வாழ்கிறார்கள். மன்னர் ஆட்சி நிகழும் நாடுகளில் சிலவற்றில், தங்களுக்கு அனுகூலங்கள் ஏற்படாமையினால் குடிகள் அதிகம் வருந்துகிறார்கள். அவர்கள், தங்களுக்கு அனுகூலம் செய்யப்படும்படிக்கு வரி செலுத்துகிறார்கள். ஆனால் அத்தகைய சில நாட்டு மன்னர் அவ்வரிப்பணத்தில் பெரும் பகுதியைத் தம் குடும்பத்தினர் செலவுக்கு எடுத்துக் கொண்டு குடிகளுக்குத் தேவையான அனுகூலங்களைச் செய்யாமல் விட்டு விடுகிறார்கள். அவர்களின் நாட்டில் ஜனங்கள் செலுத்தும் வரிப் பணத்தில் எவ்வெவ் வகையில் எவ்வளவெவ்வளவு செலவழிக்கப் படுகிறதென்பதைத் தெரிவிக்கும்படி அம்மன்னரைக் கேட்பதற்கும், அப்பணத்தில் இவ்வளவு இவ்வளவு பணத்தைக்கொண்டு இன்னின்ன அனுகூலங்கள் தங்களுக்குச் செய்யப்படவேண்டுமென்று அம்மன்னரிடம் தெரிவிப்பதற்கும் குடிகளுக்கு அதிகாரமில்லை. இத்தகைய அதிகாரம் மேற்கூறிய மன்னர்களின் குடிகளுக்கு இருக்கவேண்டியது அவசியமாகும். அஃதில்லாதபடியால், ஷை மன்னர் ஆட்சி குடிகளுக்குச் சம்மதமானதாயில்லை.

மன்னர்குடியாட்சி என்பது-மன்னர் தேசத் தலைவராயிருக்க குடிகள் ஆட்சிபுரிதலாம். அத்தகைய ஆட்சி புரிபவர் பணக்காரர்களாவர். அவர்கள், தங்களுக்கும், மன்னருக்கும், இதர பணக்காரர்களுக்கும் மேன்மேலும் அனுகூலங்கள் ஏற்படும்படி செய்கிறார்கள்; நாட்டில் ஏழ்மையான நிலைமையிலுள்ள குடிகளுக்குத் தேவையான அனுகூலங்களைச் செய்வதில்லை. அதனால், ஏழைக் குடிகளுக்கு இத்தகைய ஆட்சி ஏற்றதாயில்லை.

குடியாட்சி என்பது குடிகள் ஆட்சி புரிதலாகும். இந்த ஆட்சி புரிபவர்களும் பணக்காரர்களாயிருக்கிறபடியால் அவர்கள், தங்களுக்கும் மற்ற பணக்காரர்களுக்கும் அனுகூலம் செய்து கொண்டு ஏழைக் குடிகளுக்குத் தக்க அனுகூலங்கள் செய்யாமலிருந்து விடுகிறார்கள். இதுபற்றி இந்த ஆட்சியும் ஏழைக் குடிகளுக்குத் தக்கதாயில்லை.

ஏழை ஆட்சி என்பது ஏழ்மையான நிலைமையிலுள்ளவர்கள் மந்திரிகளாக ஏற்பட்டு நாட்டை ஆட்சி புரிதலாம். இத்தகைய ஆட்சி உலகில் ரஷ்யா தேசத்தில்தான் நடைபெறுகிறது. அத்தேசத்தில் பத்து ஆண்டுகளுக்கு முன்னர் மன்னர் குடியாட்சி நடைபெற்று வந்தது. அத்தகைய ஆட்சியை நடத்திய மன்னனும், பணக்காரர்களும் தங்களுக்கு அனுகூலம் தேடிக்கொண்டு ஏழைகளுக்குத் தக்க அனுகூலங்கள் செய்யாதபடியால் ஏழைகள் அதிகமாக வருந்தலாயினர். அதனால் அவர்கள், தங்களில் திறமை வாய்ந்தவர் சிலர் மந்திரிகளாக ஏற்பட்டால்தான் தங்களுக்கு அனுகூலம் கிடைக்குமென்றும், சந்தோஷமான வாழ்க்கை ஏற்படுமென்றும் கருதலாயினர். அதன்மேல் அப்பதவியைப் பெற முயன்றனர். ஏழைகள் சுலபத்தில் மந்திரிகளாக ஏற்பட முடியாது. அவர்கள் மந்திரிகளாக ஏற்படுவதற்குப் பிரயத்தனஞ் செய்கையில் பணக்காரர்கள், அவர்கள் மந்திரிகளாக ஏற்படாதபடி அவர்களுக்குப் பல இடைஞ்சல்களையும், தொல்லைகளையும் விளைவிப்பது சகஜம்; ரஷ்யாவிலுள்ள ஏழைக் குடிகள் இதனை நன்கறிந்திருந்தனர். எனினும் அவர்களில் ஒருவராகிய லெனின் என்பார் தம்முடன் சிலரைச் சேர்த்துக்கொண்டு, தங்களைப் போன்ற ஏழைகள் மந்திரிகளாக ஏற்படுவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்ய முற்பட்டார். அந்த ஏழைகளுக்குப் பல அனுகூலங்கள் ஏற்பட்டு அவர்கள் சந்தோஷமாக வாழ வேண்டுமென்றும், ஏழைகள் மந்திரிகளாக ஏற்பட வேண்டுமென்றும் எண்ணங் கொண்டிருந்தவர்களையும், வாய்ப் பேச்சளவாகவும் எழுத்தளவாகவும் நின்றுவிடாமல் செய்கையால் ஒரு காரியத்தைச் சாதிக்கக் கூடியவர்களையும் தம்முடன் சேர்த்துக் கொண்டார். இக்கூட்டத்தாருக்கு கம்மியூனிஸ்ட் கட்சியார் என்று பெயர். லெனின், இக்கூட்டத்தாரைச் சேர்த்தபின், தங்கள் நாட்டை ஆட்சிசெய்த பணக்காரர்கள் செய்த அநீதங்களையும், தங்

கள் நாட்டில் முதலாளிகள் தொழிலாளர்களை வருத்தியதையும், மிராசுதார்கள் பண்ணையாட்களை இம்சித்ததையும், ஏழைகளுக்கு ஏற்படவேண்டிய அனுகூலங்களையும், ஏழைகள் மந்திரிகளாக வேண்டிய அவசியத்தையும் நாட்டிலுள்ள ஏழைக்குடிகளுக்கு எடுத்துரைத்தனர். இக்குடிகள் உடனே தங்களுக்கிருந்த வறுமையைப் போக்கிக் கொள்வதற்கு மேற்கூறிய கட்சியாருடன் சேர்ந்து உழைத்ததல்லாமல் அவர்களுக்குப் பல வகைகளில் உதவிபுரிந்து பக்கப் பலமாகவும் பேராதரவாகவுமிருந்தனர். இக்கட்சியாரில் முதன்மையாயிருந்தவர்கள், சிறந்த அறிவு வாய்ந்தவர்களாகவும், அஞ்சாநெஞ்சம் படைத்தவர்களாகவும், வீரம் பொருந்தியவர்களாகவுமிருந்தனர். அவர்கள் கூடித் தாங்கள் செய்யவேண்டிய காரியங்களைப்பற்றி யோசித்தனர்; அங்ஙனம் யோசித்துத் தீவிர முயற்சி செய்து சென்ற 1917-ம் ஆண்டுக் கடைசியில் பணக்கார மந்திரிகளை அப்புறப்படுத்தி மந்திரி பதவி பெற்றுத் தங்கள் நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றினர். இவ்வாறு, பணக்கார மந்திரிகளை ஒழித்து, ஏழைகள் மந்திரிகளாக ஏற்படும்படி செய்து, நாட்டிலுள்ள மக்கள் எல்லோரும் சந்தோஷமாக வாழுதற்கு வழி ஏற்படுத்திய லெனின் என்பார் நான்கு வருடங்களுக்குமுன் விண்ணுலக மேகினர். ரஷ்யாவிலுள்ள ஒவ்வொரு குடும்பத்தாரும் அன்றுமுதல் இன்று வரையில் அவரைத் தம் குலதெய்வமாகப் போற்றி வருகிறார்கள்.

மேற்கூறிய சோவியட் அரசாங்கத்தார் என்று கூறப்படும் கம்மியூனிஸ்ட் கட்சி மந்திரிகள் ஆட்சி புரிந்துவரும் இந்நாளில் ரஷ்யாக் குடிகளுக்கு ஏற்பட்டுள்ள அனுகூலங்கள் பலவாம். அந்நாட்டில் பணக்காரனென்றும் ஏழையென்றும் பேதம் பாராட்டப்படுவதில்லை; இரயிலில் முதல் வகுப்பென்றும், இரண்டாவது வகுப்பென்றும், மூன்றாவது வகுப்பென்றும் வண்டிகள் பிரிக்கப்பட்டில்லை, எல்லா ஜனங்களும் ஒரே விதமான வண்டியில்தான் செல்கின்றனர்; பிரபுக்களின் மாளிகைகள் வைத்தியசாலையாகவும், பொருட்காட்சி சாலையாகவும் விளங்குகின்றன; பணக்காரர்கள் வசித்த மாளிகைகள் ஜனங்களுக்குப் பொதுவான ஸ்தலங்களாயிருக்கின்றன; பத்து வருடங்களுக்குமுன் அங்கே சொற்ப பள்ளிக்கூடங்களே இருந்தன; இப்போது எங்கும் பாடசாலைகள் இருக்கின்றன; ஒருவன் சொத்தாயிருந்த தொழிற்சாலை இப்போது

குடிகளின் சொத்தாகமாறி, அத்தொழிற்சாலையில் வேலை செய்பவர்கள் அதிகாரத்திற் குட்பட் டிருக்கிறது; ஒரு மிராசுதாருக்குச் சொந்தமாயிருந்த நிலம் இப்போது அவரிடத்திலிருந்த பண்ணையாட்களுக்குச் சொந்தமான நிலமாக மாறிவிட்டது; முந்தித் தொழிற்சாலைகளில் தினம் பத்துமணி நேரம் வேலை செய்தவர்கள் இப்போது ஏழுமணிநேரம்தான் வேலை செய்கிறார்கள்; போதுமான அளவு உணவும் உடையுமின்றித் தவித்த மக்கள் இப்போது சுத்தமான ஆடை அணிந்து புஷ்டியான தேகத்துடன் விளங்குகிறார்கள்; ஆடம்பரமான வாழ்க்கை ஒழிந்து எங்கும் ஒரே தன்மையான வாழ்க்கை நிகழ்கிறது; வீட்டின் சொந்தக்காரர் வீட்டைச் செப்பனிடாவிடில் குடித்தனக்காரர் செப்பனிட்டு, ஏற்பட்ட செலவைக் குடிக்கூலியில் கழித்துக் கொள்ளுகிறார்கள்; ஆதியில் நம் நாட்டில் ஆட்சி புரிந்தவர்கள் செய்ததுபோல், ரஷ்யா அரசாங்கச் செலவு நிமித்தமாக ஆட்சியாளர், விளைவில் ஒரு சிறிய பகுதியை விவசாயிகளிட மிருந்து நிலவரியாகப் பெறுகிறார்கள்; ஆதிகாலத்தில் நம் நாட்டார் ஒரு பொருளை மற்றவரிடம் கொடுத்து இன்னொரு பொருளைப் பெற்றனர்; இப்போதும் சில குக்கிராமங்களில் இவ்வாறு பண்டமாற்று செய்யப்படுகிறது; ரஷ்யா அரசாங்கத்தார், மானிடர் வாழ்க்கைக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் தாங்களாகவே செய்து, சொற்ப அளவு தானியத்திற்கு அப்பொருள்களை விவசாயிகளுக்குக் கொடுக்கிறார்கள்; குடிகளுக்கு இன்னும் அனேக அனுகூலங்கள் ஏற்பட்டு அவர்கள் உயர்வு தாழ்வின்றி எல்லோரும் சமமானவர்களாய்ச் சந்தோஷத்துடன் வசித்து வருகிறார்கள்.

ஆதலின் நம் நாட்டிலும் ஏழ்மை நிலைமையிலுள்ளவர்கள் கூடிய சீக்கிரத்தில் ஒரு கட்சியாராக ஏற்பட்டு அடுத்த தேர்தலில் சட்டசபை அங்கத்தினராகவும், மந்திரிகளாகவும் அமர்ந்து ஏழ்மை நிலைமையிலுள்ளவர்களுக்கு அனுகூலம் ஏற்படும்படி சட்டங்கள் ஏற்படுத்தவேண்டும். எல்லோரும் உரிமைபெற்று வாழும் மார்க்கங்களை உண்டாக்கவேண்டும்; சிலர் மாத்திரம் பணக்காரர்களாய் ஏழைகளைக் கவனிக்காமல் தங்கள் ஐசுவரியத்தை மட்டும் பெருக்கிக்கொண்டு போகும் சுயநலக் கொள்கைகளை அடியோடொழிக்க முயலவேண்டும். அப்படிச் செய்தால் மாத்திரம் தான் ஏழைகள் முதல் சகலரும் சௌக்கியமடைதல் கூடும்.

ஓம் தத் ஸத்.

# சந்தா நேயர்களுக்கு
## 14-வது ஆண்டின் முன்னறிவிப்பு.

நம் போதினியின் மீது அன்பு செலுத்திவரும் சந்தாதாரர்களாகிய நண்பர்களே! நாளிது விபவஸு ஆடிமீ கூ (16-7-1928) நம் ஆனந்த போதினிக்கு 14-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின், சந்தாதாரர்கள் ஷை 14-வது ஆண்டின் சந்தாத்தொகையை நாளிது விபவஸு ஆனிமீ கூ (14-6-1928) க்குள் மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ செலுத்திவிடும்படி கோருகிறோம். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புவோர் அவ் விவரத்தை ஷை 14-6-1928 க்குள் கார்டின் மூலமாகவோ நேரிலோ தெரிவித்துவிட வேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாகச் செலுத்திவிடுகிறவர்களுக்கு வழக்கம்போல் நாளிது விபவஸு ஆனிமீ சஞ்சிகையும், அதற்குப் பின்வரும் சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகையை நிறுத்திக்கொள்ளும்படி தெரிவித்தவர்களுக்கு நாளிது விபவஸு ஆனிமீ சஞ்சிகைமட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். இங்குக் குறித்தபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும் அடுத்த 14 – வது ஆண்டின் சந்தாத்தொகைக்காக நாளிது விபவஸு ஆனிமீ பத்திரிகை வி. பி. யில் அனுப்பப்படும். இவர்கள் சந்தாத்தொகையை அனுப்பாமலும், பத்திரிகைவேண்டாமென்று தெரிவிக்காமலு மிருப்பதால் பத்திரிகையை வி. பி. யில் பெற்றுக்கொள்ள விருப்பமுடையவர்களா யிருக்கிறார்களென்று நாங்கள் உறுதிகொள்கிறோம். அதனாலேயே இவர்களுக்கு வி. பி. யனுப்பப்படுகிறது. ஆதலின், இத்தகைய நண்பர்கள் வி. பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கோருகிறோம். இவ்வாறு வி. பி. யைப் பெற்றுக்கொள்கிறவர்களுக்கும் சஞ்சிகைள் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி. பி. யில் 3 அணா அதிகச் செலவும், சஞ்சிகை வந்துசேர வீண் காலதாமதமும் நேருகின்றன. ஆதலின், எல்லோரும் முன்பண மனுப்பிவிடுவதே நலம்.

பினங்கு, சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி. பி. இல்லையாதலின், அவ்விடங்களிலுள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேண்டும்.

இங்குக் குறிப்பிட்டிருப்பவைகள் எல்லோருக்கும் நன்மைதரக் கூடியனவாதலின் சந்தாதாரர்களாகிய நண்பர்கள் வீண் குதர்க்கம்செய்து நமக்கு வீண் சிரமத்தை யுண்டாக்காமல் இவற்றின்படி நடந்துகொள்ளுமாறு ஒவ்வொருவருக்கும் நினைப்பூட்டுகிறோம். விஷயத்தை யுணராமல் வீண் தர்க்

கம்செய்து கடிதங்களெழுதி வேதனையை யுண்டாக்குவோரின் உள்ளப்போக்கைப்பற்றி வருடந்தோறும் குறிப்பிட் டெழுதியிருக்கிறோம். அவற்றை யுணர்ந்த புத்திமான்களுக்கு அவர்கள் செய்கை நன்மைதராத தென்பதும் நாம் செய்திருக்கும் ஏற்பாடு இருபாலார்க்கும் நலந்தரத்தக்க தென்பதும் விளங்கும். ஆதலின் புத்திமான்கள் நுட்பமாக எல்லாவற்றையும் ஆராய்ந்து வீண் தர்க்கம் செய்யாமல் நம்முடைய ஏற்பாட்டின்படி நடந்துகொள்வார்களென்றே நம்புகிறோம்.

☞ 14-ம் ஆண்டின் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்புகிறவர்களுக்குப் படிப்பதற்கு மிக்க விநோதமாயிருக்கும் 'ஓயாச்சிரிப்பு' என்னும் புத்தகமொன்று இனமாக அனுப்பப்படும்.

முன்பண மனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால், மணியார்டர் கூபனில் தங்கள் சந்தாநம்பரைக் குறிப்பிட்டு, "14-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுதி யனுப்பவேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்ற விவரம் எழுதி யனுப்பவேண்டும். பழைய ஒவ்வொரு சந்தாதாரர்க்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும்வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலதுபக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். சந்தா நம்பர் எழுதுவோர் அதைப்பார்த்துக் கடிதங்கள், மணியார்டர் முதலியவற்றில் எழுதவும்; மேல் உறையின் இடப்பக்கத்தில் 1190 என்ற ரிஜிஸ்டர் நெம்பர் அச்சிடப்பட்டிருக்கும். அதை எழுதக்கூடாது. மேலே குறித்தபடி கையால் எழுதப்பட் டிருப்பதையே குறித்தெழுதவேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தாநெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி. பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்திவிடும்படி எழுதுவோரும் மேற்குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித் தெழுதவேண்டும். ப-ர்.

## முன்பண மனுப்பும் சந்தா நேயர்க்கு விஞ்ஞாபனம்.

நம் ஆனந்த போதினி 14-வது ஆண்டு சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்புகிறவர்களுக்கு "ஓயாச்சிரிப்பு" என்னும் புத்தகமொன்று இனமாக அனுப்பப்படுமென்று நாம் விளம்பரம் செய்திருக்கிறோம். அதன்படியே அனுப்புவோம். ஆனால், எல்லோரும் பணம் அனுப்பித்தீர வைகாசிமீ கடைசிவரை செல்லும். அதற்குமேல் மொத்தம் பார்த்துக் கணக்கு முடிவாக இரண்டு மாதங்கள் செல்லும். அவ்வாறு முடிந்தபின், முன்பணம் அனுப்பியவர்கள் இத்தனை பேர் என்பதைக் கணக்கிட்டு எல்லோருக்கும் ஒரே சமயத்தில் ஆவணிமீ தான் ஷை இனம் புத்தகம் அனுப்புவோம். ஆதலின், முன்பண மனுப்பும் நண்பர்கள் அதற்குமுன் ஷை இனம் புத்தகத்தைப் பற்றிக் கடித மெழுதாதிருக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.




## பண்டித ஸ்ரீ மதன மோகன மாளவ்யா.

(442-ம் பக்கத் தொடர்ச்சி)

### காங்கிரஸ் தொண்டு.

மாளவ்யா அவர்கட்குச் சிறுபிராயம் முதல் தேசீய இயக்கங்களிலொத்துழைக்க அதிகப்பிரிய முண்டென்று நாம் முன்பு கூறினோமல்லவா? அவ்வியல்பு இப்பொழுது முதிர்ந்து நின்றது. அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் இரண்டாமாண்டு விழா 1886-ம் ஆண்டில் கல்கத்தாவில் ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் தலைமையின் கீழ் நடைபெற்ற போழ்து, ஆங்கு வீற்றிருந்த தேசாபிமானிகள் மேடையில் நின்று தாய்நாட்டின் அன்பினைச் சிறப்பித்துப் பேசுவது கேட்ட அவருக்குத் தாமும் பேசவேண்டுமென்ற அவா வுண்டாயிற்று. பண்டித ஆதித்யராம் என்பாரும் மாளவ்யாவை உற்சாகப்படுத்தினார். அதற்கிணங்க அவரும் எழுந்து பேசினார். இச்சொற்பொழிவை அச்சபை உபசரணைக் கழகத்தலைவரான ஹியூம் துரை யென்பார், "காங்கிரஸ் மேடையில் அனைவரையும் உற்சாகப்படுத்திப் பேசியதில் பண்டித மதன மோகன மாளவ்யா அவர்களின் சொற்பெருக்கே மிக்க ஆர்வத்தோடு ஏற்கப் பெற்றதாகும். அவர் ஓர் உயர்ந்த பிராம்மண குலத்தைச் சார்ந்தவர். அவருடைய பிரகாசவதனமும், சொல்லணியும், துரிதமாகவும், சாதுரியமாயும், வன்மையோடும் பேசிய வளமும் ஒவ்வொருவர் மனத்திலும் ஆழமாகப் பதிந்துவிட்டது. சிங்கக்குட்டியைப்போல் அவர் குதித்தெழுந்து, அமுதமின்னு மெழுமெனு மாசையால் ஆரவாரித்திருந்த அன்பரனைவரையும் ஆனந்திக்கச் செய்தார்." என்று அவ்வாண்டறிக்கையில் வரைந்தார். மாளவ்யா அம்மகாசபையிற் பேசிய பொருள், 'சட்டச்சபைச் சீர்திருத்தம்' என்பதே. அதில் அவருடைய அரிய வாக்கியத்தை மட்டும் ஈண்டுக் குறிப்பிடுகின்றோம். அவர் சொன்னதாவது:—"பிரதிநிதித்துவமின்றி வரி விதித்தலில்லை. அதுதான் ஆங்கிலேயர்களது ராஜீய வேதத்தின் முதல் ஏற்பாடு." என்பதுதான். இதே விஷயத்தைக் குறித்து அவர் அடுத்த மூன்றாவது ஆண்டு விழாவில் சென்னையில் பேசினார். அப்பொழுது ராஜா. சர். டி. மாதவராவ் அவர்கள், திவான் பகதூர். ஆர். ரெங்காராவ் அவர்கள், எல் டேர்லி நார்டன், முதலாயினோர் புகழுரை தந்தனர். ஹியூம் துரையவர்களும், "இவ்விஷயத்தைக் குறித்து மாளவ்யாவைவிடச் சிறப்பாகப் பேசும் வன்மை வேறு எவருக்கு மில்லையென்று நான் உறுதியாகச் சொல்லுவேன்"

என்றெழுதினர் தமதறிக்கையில். அதுமுதல் காங்கிரஸ் மகாசபையின் பேருறுப்பினராக மாளவ்யா கொண்டாடப்பட்டு வந்தார். தர்க்க முறைகளாலும், உபந்நியாசங்களாலும், அவர், காங்கிரஸ் அறத்தை மக்கள்தம் கருத்தினிற் புகவைத்தார். கல்கத்தாவில் இரண்டாவது காங்கிரஸ் மகா சபையின் வருட மகோத்ஸவம் நிகழ்ந்தபின், ஹியூம் துரையவர்களின் வேண்டுகோட்படி அவர் வடமேற்கு மாகாணங்களில் சுற்றுப்பிரயாணஞ் செய்து பலரையும் காங்கிரஸ் தொண்டிலீடுபடச் செய்து அம்மாகாணங்களில் தேசாபிமானத்தைப் பெருக்கி வந்தார். அதன் பலனாக, அடுத்தபடி சென்னையில் நடைபெற்ற காங்கிரசுக்கு வடமேற்கு மாகாணங்களிலிருந்து நூற்றுக்கணக்கில் பிரதிநிதிகள் வரத்தொடங்கினர். அப்பொழுது அவர் சேவையைப் பாராட்டி வடமேற்கு மாகாணங்களின் காங்கிரஸ் காரியதரிசியான பதவி அவருக் களிக்கப்பட்டது. அதனை அவர் பலகாலம் வகித்து வந்தார். சென்னைக் காங்கிரசுக்குப் பிறகு ஹியூம் அவர்கள் அவாவிற்கிணங்க 1888-ம் வருட காங்கிரஸ் விழா அலகபாத்தில் நடைபெற ஏற்பாடு செய்யப் பெற்றது. ஒரு காங்கிரஸ் வருடோத்ஸவம் நடத்தி முடிப்பதெனில் எத்துணைப் பொருளும், சிரமமும், உழைப்பும், ஏற்பாடுகளும் வேண்டியிருக்கு மென்பதை, சென்னையில் நிறைவேறிய சென்ற காங்கிரசுக்குப் போயிருந்த நம்மில் பலரும் அறிவர். மாளவ்யா அவ்விஷயத்தில் மிகுந்த பாடுபட்டு நின்றார்; பண்டித அஜீதிய நாதருடன் சேர்ந்து அவர் அரும்பாடு பட்டார்; பொருள் சேகரிக்க ஊர்ஊராகச் சுற்றுப்பிரயாணஞ் செய்தார். அக்காலத்தில் மக்கள் தேசநல உணர்ச்சியை இக்காலத்தைப்போல் பெற்றிருக்கவில்லையாதலின் பொருள் கூட்டுவது சிரமமாகவே யிருந்தது. பண்டித பிஷம்பர் நாதரும் வரவேற்புக் கழகத்தலைவராய் பெருந் தொண்டு புரிந்தார். ராய்பகதூர் லாலாராம் சரன்தாஸ், பாபு சருசந்திர மித்திரர் ஆகியோர் அவருடன் ஒத்துழைத்தனர். அப்பால் 1892-ல் அலகபாத்தில் காங்கிரஸ் மகாசபை கூடுமாறு அம்மாகாணத்தாரால் வேண்டப்பட்டபொழுது, பல தேசாபிமானிகளும், ஒரு சார்மக்களும் பண்டித அஜீதிய நாதரின் மரணத்தால் நிராசையுற்று, மனந்தளர்ந்து, தம்மாலொன்று மியலாதென்று மறுத்தனர். அவ்வமயம் மாளவ்யா அவர்கள், அவர்களைத்தேற்றி, தீரநெஞ்சுடன் திடம்படப்பேசி, 'இறப்பும் பிறப்பும் உலக இயல்பன்றோ? இதனால் தேச சேவையைப் புறக்கணித்தல் நமது மதியீனத்தை வெளிப்படுத்தும்' என்றியம்பி அவர்களை ஊக்கினர். இவ்விதம் எக்காரணத்தாலும் மனந்தளரா துழைத்து அப்பெரியார் 1908-ல் ஐக்கியமாகாண காங்கிரஸ் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார்; அப்பால் 1909-ல் அகில இந்திய காங்கிரஸ் மகா சபையின் அவைத்தலைமையை யடையும் பாத்தியதையையும், பாக்கியத்தையும் பெற்றார்.

## போது கௌரவ பதவிகள்.

நிற்க, பல ஆண்டுகட்கு முன்னரே மாளவ்யா அலகபாத் நகர பரிபாலன சபையின் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். சிலகாலம் அச்

சபையின் தலைவராகவும் அவர் வேலை பார்த்துவந்தார். அதன்பின் அலகபாத் சர்வகலாசாலையார் அவரைக் கல்விச்சபை உறுப்பினராக்கிக் கௌரவித்தனர். அலகபாத் சட்டசபையில் ஸ்ரீஜத் பண்டித பிஷாம்பருடைய ஸ்தானத்தில் அவர் சட்டசபை யங்கத்தினராக 1902-ல் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அந்நாட்களில் சட்டசபையில் உண்மையான தேசாபிமானத்துடனும், சுதந்திர வேட்கையுடனும், பொறுப்புடனும் பாடுபட்டு வந்தார். அரசாங்கத்தார் கொண்டுவந்த பண்டில்கண்ட் நிலப்பராதீனப் படுத்து மசோதா (Bundelkhand Land Alienation Bill), சுங்க மசோதா (Excise Bill), வருடாந்தர வரவு செலவுத் திட்டம் முதலியவற்றை அவர் எதிர்த்து விளங்கினார். ஆனால் அவருடன் பக்கபலமாயிருந்து போராட ஒருவருமில்லை. அப்பொழுது அடுத்த புதுச் சட்டசபையிலே அவருடைய அன்பர்கள் சிலர் தேர்ந்தெடுக்கப்பெற்று வந்தனர். அவர்களுள் செப்பருஞ் சீர்த்தொண்டர் பண்டித மோதிலால் நேரு (அவர் சுதேச பக்திக்கு இணை யார்?) அவர்களும், பாபு கங்கா பிரசாத வர்மரும் அவரைப்போன்றே அஞ்சா நெஞ்சினராக உழைக்க வாரம்பித்தனர். அவர்களது ஒத்துழைப்பைக் கொண்டு மாளவ்யா அவர்கள் மாகாண அரசாங்க நிர்வாகத்தைப் பற்றியும், அரசாங்க நிதிச்செலவின் பொறுப்புள்ள அதிகார ஸ்தானத்தைப் பற்றியும் நல்ல சாக்ஷியங் கொடுத்தார். இத்தகைய உழைப்பால் அவருக்கு 'இம்பீரியல்' சட்டசபை அங்கத்தினராக நியமனமுங் கிடைத்தது.

## மாணவர்க் குதவி.

கல்வி வளர்ச்சியில் மாளவ்யா கொண்ட ஊக்கத்திற் களவின்று. சுற்றுப் புறங்களிலிருந்து வித்தையை விரும்பி அலகபாத்திற்கு வரும் மாணவர்கட்கு இருக்கத்தக்க விடுதி யொன்றை, கனம் பண்டித அந்தரலாலருடன் கூடி யாலோசித்து அவரது தக்க கூட்டுறவால் கட்டிக் கொடுத்தார். அங்குச் சுகாதார முறைப்படி ஏற்ற உணவளிக்கவும் ஏற்பாடாயிற்று. அவருடைய பிரயாண குடும்பச் செலவிற்குப் போதிய பொருள் கிடைத்துவிட்டால் அதற்குமேல் அவர் பொருளீட்ட முயற்சி செய்வதில்லை. அம்மாணவர் விடுதி நாளடைவில் வளர்ந்து கலைமகளைப் போற்றும் கருத்துள்ள மாணவர்களான இளவரசர்கள் வசிக்கும் அரண்மனையைப்போ லமைக்கப்பெற்று இன்றும் வெகு விமரிசையாக நடைபெற்று வருகிறது.

(தொடரும்) ஸ்ரீ லக்ஷ்மீகாந்தன்.

---

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

## மது விலக்கு.

### ஆனந்தக் களிப்பு.

மதுவை விலக்கிடு வீரே—நல்ல
வாழ்வு பெருகிடு மாண்புடை யோரே. (மது)

1. மதியைக் கெடுப்பது கள்ளே—மிக்க
மயக்கந் தியக்கந் தருவதுங் கள்ளே
சதியைக் கொடுப்பது கள்ளே—உடல்
தள்ளாடி வீழ்ந்திடச் செய்வதுங் கள்ளே. (மது)

2. கைப்பொருள் போக்கிடுங் கள்ளே—என்றுங்
கவலை பெருகிடச் செய்திடுங் கள்ளே
தப்பு மிகச்செயுங் கள்ளே—பொல்லாச்
சண்டை தினமு முண்டாக்கிடுங் கள்ளே. (மது)

3. கீர்த்தியைப் போக்கிடுங் கள்ளே—துட்டுக்
கிடைக்கா விடில்திரு டச்செயுங் கள்ளே
சீர்த்தி யழித்திடுங் கள்ளே—பல
தீமை வளர்ந்திடச் செய்வது கள்ளே. (மது)

4. வறுமை மிகச் செயுங் கள்ளே—உள்ள
மதிப்பு முழுதுங் கெடுத்திடுங் கள்ளே
பொறுமையைப் போக்கிடுங் கள்ளே—மிக்க
பொய்ம்மொழி கூறப் புரிந்திடுங் கள்ளே. (மது)

5. வஞ்ச மிகச்செயுங் கள்ளே—உயர்
மங்கையர் கற்பழிக் கச்செயுங் கள்ளே
நெஞ்சைக் கலக்கிடுங் கள்ளே—நீதி
நெறிகள் விலகிடச் செய்திடுங் கள்ளே. (மது)

6. கல்விக் கிடையூறு கள்ளே—கெட்ட
கன்னத் தொழில்புரி யச்செயுங் கள்ளே
பல்லிளிக் கச்செயுங் கள்ளே—பல
பாடல் களையுள றச்செயுங் கள்ளே. (மது)

7. கொலைசெயத் தூண்டிடுங் கள்ளே—தனைக்
கொண்ட மனையுதைக் கச்செயுங் கள்ளே
தலையைச் சுழற்றிடுங் கள்ளே—பெற்ற
தனையரை வைதிடச் செய்திடுங் கள்ளே. (மது)

8. வீட்டைக் கெடுத்திடுங் கள்ளே—கொண்ட
வேலை தொலைந்திடச் செய்திடுங் கள்ளே
வாட்ட மிகச்செயுங் கள்ளே—கவி
வாணரைத் தாழ்த்தும் வகைசெயுங் கள்ளே. (மது)

9. சூதிற் புகுத்திடுங் கள்ளே—வாயிற்
சொல்லாத சொற்சொல்ல வைத்திடுங் கள்ளே
வாதில் மிகச்செயுங் கள்ளே—தினம்
மானம் விடுத்தலை யச்செயுங் கள்ளே. (மது)

10. அன்பொடு பாரதி தொண்டு—செயும்
ஆறு முகன்தமிழ் நீதியுட் கொண்டு
இன்புறு பாடல் நவின்று—தேச
மெங்கு மானந்தக் களிப்புடன் சென்று. (மது)

செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

# மது விலக்குக் கும்மி.

1\. மான மழிக்கும் மதுக்குடியே—நல்ல
மார்க்கங் குலைக்கும் மதுக்குடியே
ஈன மளிக்கும் மதுக்குடியே—நற்பே
ரின்பந் தொலைக்கும் மதுக்குடியே.

2\. ஆஸ்தி யொழிக்கும் மதுக்குடியே—சுக
ஆக்கந் தவிர்க்கும் மதுக்குடியே
சாஸ்திரத்தி னின்று தள்ளப்பட்ட பெருஞ்
சண்டாள மாகும் மதுக்குடியே.

3\. வஞ்சகச் சூது கொலைகளவு காம
வன்மை பெருக்கும் மதுக்குடியே
பஞ்சமா பாதக மிஞ்சு செயல்களைப்
பயிற்று விக்கும் மதுக்குடியே.

4\. மைந்து விழுந்து கிடந்து புரண்டு
நடித்திடச் செய்யும் மதுக்குடியே
ஐந்தேகாற் கோடி பணத்தையோ ராண்டினில்
அடிக்குங் கொள்ளை மதுக்குடியே.

5\. பெண்டு களின்திரு மாங்கலி யத்தையும்
பிடுங்கச் செய்யும் மதுக்குடியே
அண்டு மினத்தையும் அன்பரையும் பகை
யாக்கி விடும் தீ மதுக்குடியே.

6\. சாந்த சமுத்திர மாக வுதித்தஸ்ரீ
சாத்மீக யோக புண்ய புருஷர்
காந்தி மஹான்முறை கழறிக் கதறிக்
கண்டிப்பது மிம் மதுக்குடியே.

7\. நஞ்சுண்பர் கள்ளுண்பா ரென்றே முதியவர்
நவின்ற அமுத வாக்யமதை
நெஞ்சு ளிருத்தியே நீணில மீதினில்
நீக்கிடு வோந்துர் மதுக்குடியே.

8\. கொடிக ளேற்றியே செல்வ சம்பன்ன
குபேர னென்னவே வாழ்ந்திடினும்
குடிகா ரப்பயல் கிடக்கி றானெனக்
கூறிட வைக்கும் மதுக்குடியே.

9\. இன்றி யமையா மதுவிலக்க நாமே
என்று புரிந்துலகி லுய்வமோ
அன்றே நம்நாட்டின் குடும்பங்க ளொவ்வொன்றும்
ஆகிடும் க்ஷேமச் சுபக்குடியே.

10\. பராபர மாகவே யெங்கும் நிறைந்து
பரந்தபிரம பரவெளியே
சுராபானவகைத் துன்மார்க்கந் தேசத்தைச்
சூழ்ந்திடா தாளும் சுகவொளியே.

V. S. வீரண்ணா, அம்பலத்தாடி.



# வேதாந்தம்

T SAMBANDAN, ENGRAVER No 208 RAJAPPA CHETTY St PARK TOWN MADRAS

## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(452-ம் பக்கத் தொடர்ச்சி.)

### உலக சிருஷ்டி.

**ஞா**னகுமாரா! இனி இப்பிரபஞ்சத்தி னுற்பத்தியைக் கூறுகிறேன். கவனமாய்க் கேள். அளவில்லாத சக்தியை யுடையவனும் மாயையை உபாதியாக வுடையவனுமாகிய ஈசுவரன் தன் சங்கற்ப மாத்திரத்தினால் சராசரவடிவமாகவுள்ள இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறான்.

சீடன்:—குருநாதா! ஓர் காரியத்தின் உற்பத்திக்கு நிமித்தகாரணம், உபாதான காரணம் என இரண்டு காரணங்கள் அத்தியாவசியமானவை. கடத்தின் உற்பத்திக்குக் குலாலன் நிமித்த காரணம். மண் உபாதான காரணம். மண்ணில்லாமற் குயவன் குடத்தை வனைய வியலாது. அதுபோல, உலகசிருஷ்டிக்கும் இவ்விரண்டு காரணங்களும் தேவை. ஈசுவரன் இரண்டாவது பொருளில்லாமல் தான்மாத்திரமே யுள்ளவனாகலின், உபாதானகாரணம் அவனுக்கில்லை. உபாதான காரண மில்லாத இந்த ஈசுவரன் இந்த உலகத்தை எங்ஙனம் சிருஷ்டிப்பான்?

குரு:—நீ கூறிய துண்மையே. இரண்டு காரணங்களின்றி ஓர் காரிய வஸ்து தோன்றாது. ஆனால், ஈசுவரன் இந்த இரண்டு காரணங்களும் தானாகவே யிருக்கிறான். ஆகையால்தான் சிருஷ்டி திதி சங்காரமாகிய மூன்று காரியங்களையும் தானே செய்கிறான்.

சீட:—சுவாமி! இரண்டு காரணங்களும் ஒருவனிடத்து எவ்வாறு பொருந்தியிருக்கும்? இது சந்தேகிக்கக்கூடியதா யிருக்கிறதே.

குரு:—இரண்டு காரணங்களும் ஓரிடத்தே உளவாகும் என்பதற்கு திருஷ்டாந்தங் காட்டுகிறேன். இதனால் உன் ஐயம் அகலும். அது இது:— சிலந்திப்பூச்சி வலைபின்னுகின்றதே. எதைக்கொண்டு பின்னுகின்றது. அதாவது அதற்கு உபாதான காரணம் எது? அதனிடத்தே தானே தோன்றுகின்ற நூலேயல்லவா உபாதான காரணம்? அச்சிலந்தியானது தானே பிரதானமாகி நிமித்தகாரணமாகவும், தன்சரீரத்தின் பிரதானத் தன்மையால் உபாதான காரணமாகவும் இருக்கின்றது. அதுபோல, ஈசுவரனும் தன் பிரதானத்தால் நிமித்த காரணனாகவும், தன் உபாதியாகிய மாயையின் பிராதான்யத்தால் உபாதான காரணனாகவு மிருக்கின்றானென்று அறிக.

சீட:—என்னை ஈடேற்றவந்த எம்பெருமானே ! இப்பொழுது ஐயம் தொலைந்தது. இனி, தாங்கள் கூறத்தொடங்கிய உலக சிருஷ்டியைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும்.

குரு:—தமோகுணத்தைப் பிரதானமாகவுடைய பிரகிருதியோடு கூடிய பரமாத்மாவினால் ஆகாயம் பிறந்தது. ஆகாயத்திலிருந்து வாயு தோன்றிற்று. இவ்வாறே வாயுவால் அக்கினியும், அக்கினியால் அப்பு (ஜலம்) வும், அப்புவால் பூமியும் முறையே உண்டாயின. இந்த ஆகாயம் வாயு அக்கினி அப்பு பூமி என்னும் ஐந்தும் பஞ்சபூதங்களெனப்படும். இங்கு ஓர் விஷயம் கவனிக்கத்தக்கது. அஃதியாதெனின்: காரியவஸ்துவினிடத்துக் காணப்படும் குணம் அதன் காரணவஸ்துவினுடையதே என்பது நியதி. ஆகையால், சக்தியாகிய பிரகிருதியினுடைய காரியமாகவுள்ள இப்பஞ்சபூதங்களினிடத்து ஜடத்தன்மை காணப்படுதலால் இவற்றிற்குக் காரணமான பிரகிருதி தமோகுணப் பிரதானமானதென்பது விளங்குகின்றது.

இப்பூதங்களைந்தும் முதலில் ஒன்றோடொன்று கலப்பில்லாமல் இருந்தமையால் சூக்ஷ்ம பூதங்களென்றும் அபஞ்சீகிருத பூதங்களென்றும் (மூக்குண பூதங்களெனவும்) பெயர்பெறும். இந்தச் சூக்ஷ்மபூதங்களால் சூக்ஷ்ம தேகம் உண்டாகின்றது. இப்பூதங்களில் ஒன்றுக்கொன்று கலப்புண்டாவதால் அவை தூலபூதங்களாகின்றன. அத்தூலபூதங்களால் தூலசரீரங்களுண்டாயின. இனி சூட்சுமதேக உற்பத்தி கூறுகிறேன்.

பஞ்சிகரணப்படாத (கலப்பில்லாத) பூதங்களால் (சூட்சுமபூதங்களால்) உண்டானதும், ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்து, பிராணாதி வாயுக்கள் ஐந்து, மனம் புத்தி இரண்டு, ஆகப்பதினேழு அங்கங்களை யுடையதும், சம்சாரத்திற்குக் காரணமாகவுள்ளதுமாகிய லிங்கசரீரம் (சூட்சும சரீரம்) ஆன்மாவிற்குப் போகசாதனமாக வுள்ளது.

ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களின் சத்துவாம்சங்களினால் முறையே சுரோத்திரம் (செவி), மெய் (தோல்), கண், நாக்கு, மூக்கு என்னும் ஞானேந்திரியங்களைந்தும் தோன்றின. ஆகாசாதி பஞ்சபூதங்களின் சாத்துவிகாம்சங்கள் ஐந்தும் ஒன்றாகக்கூடி எல்லாவற்றிற்குங் காரணமான அந்தக்கரண முண்டாயிற்று.

சீட:—சுவாமி! ஞானேந்திரியங்களும் அந்தக்கரணமும் பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்தால் தோன்றியவை என்று அறிவதெப்படி?

குரு:—சத்துவகுணம் நிர்மலமானது. நிர்மலமான சத்துவகுணத்திற்கே ஒன்றைப் பிரகாசிக்கச் செய்யும் சக்தியுண்டு. இந்தச் சக்தி ஞானேந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்திற்கு மிருத்தலால் சத்துவாம்சத்தால் உண்டானவை யென்றறிதல் வேண்டும். நிற்க,

இந்த அந்தக்கரணம் விருத்தி (தொழில்) பேதத்தால் மனம் புத்தி அகங்காரம் சித்தம் என நான்கு வகையாகக் கூறப்படுகின்றது.

சங்கற்பத்தை (நினைத்தலை)ச் செய்வது-மனம்.
பதார்த்த நிச்சயஞ் செய்வது-புத்தி.
'நான்' என்னும் அபிமான முடையது-அகங்காரம்.
சிந்தித்தலைச் செய்வது-சித்தம்.

என இந்த நான்கிற்கும் காரணமும் பெயரும் காட்டுவர் ஆன்றோர்.

சீட:—முன்னம் ஞானேந்திரியம் 5. கன்மேந்திரியம் 5. பிராணன் முதலிய வாயுக்கள் 5. மனம் புத்தி 2. ஆக 17 அங்கங்களையுடையது சூட்சும சரீரம் என்றீர்கள். அந்தக்கரணம் நான்காகுமானால் சூட்சும சரீர தத்துவங்கள் பத்தொன்பது என்றல்லவோ சொல்ல வேண்டும்?

குரு:—அந்தக்கரணம் நான்கில் சித்தம் மனதிலும், அகங்காரம் புத்தியிலும் அந்தர்ப்பாவமாகும் (அடங்கும்). ஏனெனில், சங்கற்பங்களைச் செய்வது போல சிந்தித்தலைச் செய்வதும் மனத்தின் தர்மமாகும். ஆகையால் சித்தத்திற்கு மனதினிடத்தில் அந்தர்ப்பாவம் பொருந்தும். தேகாதிகளினிடத்து 'நான்' என்னும் அபிமானம் புத்திக்குக் காணப்படுகின்றது. ஆதலால், புத்தியினிடத்து அகங்காரம் அடங்கும். இதுபற்றியே புத்திக்குக் கர்த்திருத்துவமும் (கர்த்தாத் தன்மையும்) மற்ற இந்திரியங்களுக்குக் காணத்துவமும் (கருவித் தன்மையும்) ஏற்படுகின்றன. இவ்வாறு 'நான், எனது', என்னும் அஞ்ஞானத்தினால் ஆன்மாவிற்குச் சம்சார வடிவ பந்தம் ஏற்பட்டதென்றறிய வேண்டும்.

## விஞ்ஞானமய கோசம்.

சுரோத்திரம் முதலாகிய ஞானேந்திரியங்களோடு கூடிய புத்தி விஞ்ஞானமய கோசமாம். இது விசேஷமான (இகபர கருமவிஷய) ஞானத்தையுடையதாயும் ஆன்மாவிற்கு மறைப்பை யுண்டாக்குவதாயு மிருத்தலால் விஞ்ஞானமய கோச மெனப்படுகிறது. (கோசம் என்பது கத்தியின் உறைக்கும், கோசகாரப் புழுவின் கூட்டிற்கும் பெயராம்.) இந்த விஞ்ஞானமய கோசம், 'நான்' என்னும் அகங்காரத்தை (அபிமானத்தை)யும், 'நான் கர்த்தா' என்னும் பாவத்தையும் உடையதாய்ச் சகலவித சம்சாரத்தையும் நிர்வகிப்பதாகின்றது. இந்தக் கோசத்தின் அபிமானியாகிய புருஷனே தேகேந்திரியாதிகளை நானென்றும், வீடு முதலானவைகளை என்னுடையவையென்றும் அபிமானித்துக்கொண் டிருக்கிறான். மேலும், 'நான் ஜீவித்திருக்கிறேன், நான் செய்கிறேன், நான் அனுபவிக்கிறேன், நான் சுகி, நான் துக்கி' என்னும் அபிமானமும் இவனுக்கேயாம். இவனே (விஞ்ஞானமய கோசாபிமானியாகிய இப்புருஷனே) வாசனையால் தூண்டப்பட்டவனாய் புண்ணியபாவ கர்மங்களைச்செய்து அக்கர்ம பலன்களாகிய சுகதுக்கங்களைப்

பரலோக இகலோகங்களில் அனுபவிக்கின்றான். ஜீவன் இவ்வாறு கர்மங்களைச் செய்து பலவகைப்பட்ட பிறவிகளிற் பிறப்பதும் இறப்பதுமாய்ச் சம்சாரத்தில் உழலுகிறான்.

## மனோமய கோசம்.

ஞானேந்திரியங்களோடு கூடிய மனமே மனோமய கோசமாம்.

சீட:—சுவாமி! விஞ்ஞானமய கோசத்திலும் ஞானேந்திரியங்கள் சேர்ந்திருக்கின்றன. மனோமய கோசத்திலும் ஞானேந்திரியங்க ளிருக்கின்றன வெனக் கூறுகின்றீர்கள். இவ்விரண்டிற்கும் பேதமென்ன?

குரு:—மனோ தர்மம் அதிகரித்திருப்பதே மனோமய கோச லக்ஷணமாம் என்றறிய வேண்டும். சிந்தை சோகம் காமம் முதலானவைகள் இந்த மனத்தின் தர்மங்களாம். இந்தப் புருஷன் மனத்தினாலேயே சங்கற்பிக்கிறான். பலங்களைக் கோருகிறான். வெளியிலும் பிரயத்தினம் செய்கிறான். கிரியங்களைச் செய்கிறான். அனுபவிக்கிறான். ஆகையால் மனமே எல்லாவற்றிற்கும் காரணமா யிருக்கின்றது. இந்த மனமே ஜீவனுடைய பிரவிருத்திக்குக் காரணமாயுள்ளது. மனத்தினாலேயே ஜீவன் உள்ளிலும் வெளியிலுமுள்ள பதார்த்தங்களைத் தெரிந்து கொள்ளுகிறான். இதனாலேயே கேட்கிறான், முகர்கிறான், பார்க்கிறான், வசனிக்கிறான், புசிக்கிறான், சகலமும் செய்கிறான். புருஷர்களுக்கு பந்தமும் மோக்ஷமும் மனத்தினால்தான் உண்டாகின்றன. அனுகூல பிரதிகூலபதார்த்தங்களும், சித்திக்கின்றன. எப்படியெனில், பரிசுத்தமான மனத்தினால் மோக்ஷமும், அபரிசுத்தமான மனத்தினால் பந்தமும், விவேகத்தினால் பிரயோஜனமும், அவிவேகத்தினால் நிஷ்பிரயோஜனமும் நேரிடுகின்றன.

சீட:—மனம் எப்படி அசுத்தமாகின்றது?

குரு:—சத்துவகுணம் குறைந்து ரஜோகுண தமோகுணங்கள் மிகுந்துள்ள மனம் மலினமடைந்த மனமாகும். இந்த அசுத்தமனம் தமோகுண தோஷத்தையுடையதாகலின் அறியாமை, மோகம், சோம்பல், கோபம் முதலான தோஷங்களை மிகுதியு முடையதாய் அனுபவ சித்தமான நிஜ வஸ்துவின் சொரூபத்தை அறியமுடியாததா யிருக்கின்றது. இதனாலே பந்த முண்டாகின்றது.

மனம் சூட்சும வஸ்துவையும் அறியும் சக்தியுடையதா யிருந்தாலும், ரஜோகுண தோஷங்களாகிய சிந்தைகளினால் கலக்க மடைந்ததாயும், காமக் குரோதாதிகளை யுடையதாயு மிருத்தலால் பெருங்காற்றினால் அலைக்கப்படுகின்ற விளக்கைப்போல, சலித்துகொண்டு வஸ்துவை நன்றாய்ப் பிரகாசிக்கச் செய்யமுடியாத தாகின்றது. ஆதலால், மோக்ஷத்தை விரும்பும் புருஷன், சம்சார பந்த நிவிர்த்தியின் பொருட்டு மனத்தில் ரஜோகுண தமோ குணங்களும் அவற்றின் காரியங்களும் சேராமல் ஒழித்து, பிரயத்தினத்தால் மனத்தைப் பரிசுத்தமாகிய சத்துவகுண முடையதாகச் செய்யவேண்டும்.

(தொடரும்.) பூ. ஸ்ரீனிவாஸன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.



# ஆரிய சித்தாந்தம்

## முடிந்த ஞானம்.

(448-ம் பக்கத் தொடர்ச்சி.)

அரசன்: முனிவரே! வேதங்கள் பரமாத்மாவே சராசரமயமான பிரபஞ்சமென்று சொல்கின்றன. மற்றவை சிரேஷ்டமான நான்கு தெய்வங்களுண்டென்கின்றன. சில மூன்று என்கின்றன. சில இரண்டு என்கின்றன. சில ஒன்றே யென்கின்றன. இன்னும் சில பிரமம் ஒன்றே ஆத்மாவாக நிலை பெற்றிருக்கின்றது என்கின்றன. இவைகளுள் பிரமத்தை அறிகிறஞானம் இதுதான் என்று எனக்குச் சொல்ல வேண்டுகிறேன்.

முனிவர்: ஒரே பிரமந்தான் உண்டு. இதுவே சத்தியம். பலதெய்வம் உண்டு என்று கருதுவது அறியாமையினாலேதான். அரசனே! அந்தப் பிரமத்தை அடைந்தவன் எவன்? அந்தப் பிரமஞானத்தை அறிந்துகொள்ளாமலே மனிதன் தன்னைப் புத்திமான் என்று மதிக்கிறான். இன்பத்தை அனுபவிக்கவேண்டுமென்கிற விருப்பத்தினாலே வேதாத்தியயனம், தானம், யாகம் முதலியவற்றைச் செய்கிறான். இத்தகையோர் பிரமத்தினின்றும் நழுவிக் கன்மத்தில் விழுந்து வேதத்தை நம்பி யாகத்தைச் செய்கிறார்கள். சத்தியத்தினால் பிரமத்தைத் தேடுகிறவன் சீக்கிரத்தில் தன் விருப்பத்தைப் பெறுவான். எடுத்தகாரியம் பலியாதபோது அவன் மௌனவிரதத்தை ஆசரிக்கவேண்டும். தன்னை அறியும் அறிவு இருக்கிறவனிடத்தில் பிரமப்பொருளுமிருக்கும். ஞானத்தின்பலன் இப்பொழுதே அறியப்படுகிறது. தவம் பரத்தில் பலன் தரும். அதிகமாய்ப் படித்திருக்கிற பிராமணனை மனிதர் நன்றாய்ப் படித்தவன் என்று கருதுகிறார்கள். ஆனால் அவன் பிரமஞானியல்லன். வேதத்தை மாத்திரம் படித்தவன். சத்தியத்தினின்றும் வழுவாமல் இருக்கிறவனைப் பிரமஞானியென்று அறியவேண்டும். அரசனே! அதர்வணவேதத்தினாலும் முனிவர் கூட்டத்தாலும் படிக்கப்பட்ட வேதவசனங்களுக்கு முற்காலத்தில் சந்தஸ் என்று பேர்வழங்கிற்று. வேதத்தால் அறியப்படும் பிரமஞானத்தை அடையாமல் வேதத்தை மாத்திரம் படித்தவர்கள் சந்தஸை அறியாதவர்கள் என்று கருதப்படுகிறார்கள். சந்தஸானது வேறு உதவியில்லாமலே பிரமஞானத்தை அறியத்தக்க மார்க்கமாயிருக்கிறது. வேதம் விதித்த யாகத்தை மாத்திரம் அறிந்தவர்கள் சந்தஸை உணராதவர்களாவர். அரசனே! வேதத்தின் கருத்தை அறிந்தவர்கள் சிலரேயிருப்பார்கள். வேதத்தைமட்டும் கற்றவன் அறியவேண்டியபொருளை அறிவதில்லை.

சத்தியத்தில் நிலைத்திருப்பவன் வேதத்தால் அறியப்படும் பொருளை அறிவான். மனோ சக்தியானது சரீர ஞானத்தை மாத்திரம் அறிவிக்கக்

கூடியது. அதனால் பிரம ஞானத்தை அறிய முடியாது. ஒருவன் மனதினாலே மாத்திரம் ஆத்ம ஞானத்தையும் அனாத்ம ஞானத்தையும் அறிய முடியாது. ஆத்மாவை அறிகிறவன் அனாத்மாவையும் உண்மையாகவேயறிகிறான். அனாத்மாவைமட்டும் அறிகிறவன் ஆத்மாவை அறியவே மாட்டான். பிரமாணத்தை அறிகிறவன் அதனால் அறியப்படும் பிரமேயத்தை அறிவான். பிரமாணத்தால் அறியப்படும் பொருளின் உண்மையானது வேதத்தாலாவது வேதத்தை அறிந்தவர்களாலாவது அறியப்படுகிறதில்லை. வேதத்தின் உண்மைப் பொருளை உணர்ந்த பிராமணன் வேதத்தால் அறியப்படும் பொருளையும் அறிவான். ஒரு மரத்தின் கிளை பூர்வபட்சத்தின்முதல் தினத்தில் சந்திரகலையைக் குறிப்பாகக் காட்டுகிறதற்கு உபயோகப்படுவது போல வேதமும் பிரமத்தின் சிறந்த இலக்கணங்களைக் குறிப்பிட்டுக்காட்ட உபயோகப்படுகின்றது. தன் சந்தேகங்களையெல்லாம் நீக்கிக்கொண்டு, பின், பிறர் சந்தேகங்களை நீக்குகிறவனும், ஆத்மஞான முள்ளவனுமே பிராமணனாவான் என்று அறிஞர் சொல்கிறார்கள். கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு முதலிய திக்குகளிலும் திகந்தரத்திலும் தேடிப்பார்த்தாலும் ஆத்மா இன்னதென்று கண்டுபிடிக்க முடியாது. சரீரமே ஆத்மாவென்று கருதுகிறவனிடத்தில் அதைக்கண்டு அறியக்கூடாது. அது வேதத்தின் கருத்துக்கும் அப்பாற்பட்டது. யோகப்பயிற்சியுள்ள பிராமணனே அந்தப் பிரமத்தை அறிவான். அரசனே! உமது புலன்களையும் மனதையும் முற்றும் அடக்கிக்கொண்டு உமது ஆத்மாவில் வசிக்கிற பிரமத்தைத் தேடிப்பாரும். யோகத்தை மாத்திரம் பயின்றவன் முனிவனாகமாட்டான். வனத்தில் வசிக்கிறவனும் ஆகமாட்டான். தன்னை அறிந்தவனே முனிவனாவான். அவனே எல்லார்க்கும் மேலானவன். வியாகரண சாஸ்திரத்திலுண்டாகும் சந்தேகங்களை நீக்கக்கூடியவன் வையாகரணி என்று சொல்லப்படுகிறான். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் கண்டறிகிறவன் சர்வதரிசி என்று கூறப்படுகிறான். சத்தியத்திலிருந்து பிரமத்தை அறிகிறவன் பிராமணன் என்னப்படுகிறான். ஆதலால் பிராமணன் சர்வஞான முள்ளவனாவான். இந்தத் தர்மங்களை அனுஷ்டிக்கிற க்ஷத்திரியனும் பிரமத்தைக் காணலாம். வேதத்தில் சொல்லியிருக்கிற சோபான முறைப்படி மேலான நிலைமையையும் அடையலாம். நான் நிச்சயமா யறிந்த இதை உமக்குச் சொன்னேன்.

அரசன் :- ரிஷீசுவரரே ! இவைகளெல்லாம் சிறந்தவைகள்; மேலே சொல்லும்.

முனிவர்:-நீர் சந்தோஷத்துடன் கேட்ட அந்தப் பிரமம் எளிதில் அடையப்படுவது அன்று. புத்தியானது சுத்தமான ஞானத்தை அடைந்து உலக சிந்தனைகளெல்லாம் ஒழிந்தபின் சிந்திக்கத்தக்கது ; அந்த ஞானமும் பிரமசரியத்தால் அடையத்தக்கது.

அரசன்:-பிரமஞானம் மனதிலேயே யிருக்கின்றது. அது பிரமசரியத்தால் அடையத்தக்கது. மனதிலிருப்பதினால் அது பிரசன்னமாவதற்கு முயற்சி வேண்டியதில்லை. பிரமசரியத்தினாலே ஆராயும்போது அது தானே வெளிப்படுகிறதென்று சொன்னீர். பிரமத்துடன் கூடுகிற நித்தியத்துவம் எப்படி அறியப்படுகிறது ?

முனிவர்:-மனதிலிருந்தாலும் மனதுக்குச் சகஜமாயிருந்தாலும் பிரம ஞானம் வெளிப்படுவதில்லை. பரிசுத்தமான புத்தியின் உதவியாலும் பிரமசரியத்தாலும் அந்தப் பிரமஞானம் வெளிப்படுகிறது. உலகத்தைவிட்ட

யோகிகளுக்கு அடையத்தக்கதா யிருக்கிறது. சிறந்த குருவின் மூலமாகவே அது அடையப்படுகிறது. அந்த அறிவைப்பற்றி நான் சொல்லுகிறேன்.

அரசன்:-கஷ்டப்படாமல் பிரமஞானத்தை அடைவதற்குரிய அந்தப் பிரமசரியத்தின் இலக்கணம் யாது? அதை எனக்குச் சொல்லும்.

முனிவர்:-குருகுல வாசம்பண்ணிக் குருவினுடைய நல்ல எண்ணத்தையும், அன்பையும் அடைந்து பிரமசரிய விரதத்தை அனுசரித்துக் கொண்டிருக்கிறவன் இவ்வுலகத்திலேயே பிரமத்தினுடைய சரீரமாயிருக்கிறான். அவன் சரீரத்தைவிட்டு பிரமமாகவே ஆய்விடுகிறான். இவ்வுலகத்திலேயே பிரமத்தின் தன்மையை அடையவிரும்பி ஆசைகளை அடக்கி, நன்னெறியில் ஒழுகித் தன் ஆத்மாவுக்கும் சரீரத்துக்கும் உள்ள சம்பந்தத்தை ஒழித்துவிட வேண்டும். அரசனே! இந்தச்சரீரம் மாதாபிதாக்களா லுண்டாக்கப்பட்டது. குருவின் உபதேசத்தால் கிடைக்கிற புதிய சரீரமானது பரிசுத்தமானதும், பிறப்பற்றதும், அழிவற்றதுமானது. பிரமத்துடன் சம்பந்தப்படுத்தி நித்தியத்துவத்தைக் கொடுத்துச் சத்தியத்தால் மூடுகிற குருவை மாதாபிதாக்களாக மதிக்கவேண்டும். அவர் செய்த நன்மையை மனதில் வைத்துக்கொண்டு அவருக்கு யாதொரு தீமையும் செய்யப்படாது. சிஷ்யன் வழக்கமாய்க் குருவை நமஸ்கரித்து அவரை மகிமைப்படுத்த வேண்டும். மனம் சரீரம் இவைகளைப் பரிசுத்தப்படுத்திக்கொண்டு, கவனமாயிருந்து படிக்கவேண்டும். குருவினுடைய எந்த வேலையையும் இழிவாக நினைக்கக் கூடாது. கோபத்துக்கு இடந்தரக்கூடாது. இது பிரமசரியத்தின் முதற்படியாம். விதிப்படி பிரமஞானத்தை அடைய விரும்புகிற சிஷ்யன் தன் குல தர்மத்தை அனுஷ்டிப்பதும் பிரமசரியத்திற்கு முதற்படியாம். சிஷ்யன் தன் ஜீவன், ஸ்திதி, எண்ணம், வசனம், தொழில் எல்லாவற்றினாலும் ஒத்துக் குரு பணிவிடை செய்ய வேண்டும். இது பிரமசரியத்தின் இரண்டாவது படியாம். குருவின் பத்தினி புத்திரன் இவர்களிடத்திலும் குருவினிடம் போலவே நடந்துகொள்ள வேண்டும். இதுவும் பிரமசரியத்தின் இரண்டாம் படியாம்.

குருவானவர் தனக்குச் செய்ததை மனதில் நன்றாய்ப் பதியவைத்துக் கொண்டு, அதன் கருத்தையும் உணர்ந்து மனமகிழ்ச்சியோடு இவர் எனக்கு உபதேசித்தார்; எனக்குப் பெரிய காரியத்தைச் செய்தார் என்று சிந்தித்துக் கொண்டிருக்கவேண்டும். இது பிரமசரியத்தின் மூன்றாம் படியாம். சரியான சிஷ்யன் குருவுக்குச் சரியான தட்சிணை கொடுத்துவிட்டு வேறு ஆசிரமத்தை அடையவேண்டும். நான் இந்தத் தட்சிணையைக் கொடுக்கிறேனென்று வாயாலும் சொல்லக்கூடாது, மனதாலும் நினைக்கக்கூடாது. இது பிரமசரியத்தின் நாலாவது படியாம். பிரமசரியத்தின் முதற்படியானது காலத்தின் உதவியால் அடையப்படுகிறது. இரண்டாவது குருவின் சம்பாஷணையால் அடையப்படுகிறது. மூன்றாவது தன் சொந்த அறிவினால் அடையப்படுகிறது. நாலாவது விசாரணையால் அடையப்படுகிறது. பிரமசரியமானது பனிரண்டு தர்மங்களால் அடையப்படுகிறது. அவைகள் யோகங்கள் என்னப்படுகின்றன. யோகத்தில் ஊக்கமாயிருப்பது பலமென்று கூறப்படுகிறது. குருவின் உதவியாலும் பிரமத்தின் சேர்க்கையாலும் முயற்சியாலும் சித்தியாகிறது. இப்படிப்பட்ட சிஷ்யன் தான் சம்பாதிக்கிற எல்லாவற்றையும் குருவுக்குக் கொடுத்துவிடவேண்டும். இதனால் குருவானவர் நல்ல வாழ்வை அடைவார். குரு புத்திரனிடத்திலும் இப்படியே நடந்து கொள்ளவேண்டும். இவ்வாறு பிரமசரியத்தில் நின்ற சிஷ்யன் இவ்வுலகில்

எவ்வகையாலும் விருத்தியடைந்து, சந்ததியையும் புகழையும் அடைகிறான். எல்லாத்திசைகளிலு மிருப்பவர்கள் அவனுக்குச் செல்வத்தைச் சொரிவார்கள். அநேகர் பிரமசரியத்தை அனுஷ்டிக்கும்பொருட்டு அவனிடம் வந்து சேர்வார்கள். இந்தப் பிரமசரியத்தினாலேயே தேவர்களும் தேவத்துவத்தை அடைந்தார்கள். முனிவர்கள் பெருவாழ்வையும் ஞானத்தையும் பிரமலோகத்தையும் அடைந்தார்கள். இதனாலேயே கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் அழகை அடைந்தார்கள். பிரமசரியத்தினாலேயே சூரியன் பகலைச்செய்யும் பொருட்டு உதிக்கின்றான். சிந்தாமணியைப் பெற்றவர்கள் விரும்பினவற்றைப் பெறுவதுபோலத் தேவர்களும் பிரமசரியத்தினால் இஷ்டமானவற்றைப்பெற்றுச் சுகம் அடைகிறார்கள். அரசனே! தவம் செய்கிறவன் பிரமசரியத்தை நிறைவேற்றி, அதனால் சரீரசுத்தியை அடைந்து உண்மை ஞானியாகிறான். இதனால் அவன் குழந்தைகளைப்போ லாய்விடுகிறான். கடைசியில் மரணத்தையும ஜயிக்கிறான். கர்மத்தால் சுத்தஞன மனிதன் அழிந்து போவனவாகிய உலகபோகங்களையே பெறுகிறான். பிரமஞானத்தை அடைந்தவன் பிரமத்தையே அடைகிறான். மோட்சத்தைக் கொடுக்கிற ஞானத்தை அடைவதற்கு வேறு மார்க்கமில்லை.

அரசன்:-நீர்சொன்ன அந்தப்பிரமம் இந்த ஆத்மாவிலிருந்தே அடையப் படுகிறது. அந்தப் பிரமமானது வெண்மையா, சிவப்பா, கறுப்பா, நீலமா, ஊதாவா? அந்தப் பிரமத்தினுடைய நிஜசொரூபத்தையும், நிறத்தையும் எனக்குச் சொல்லும்.

முனிவர்:-அந்தப் பிரமம் வெண்மையாயும், சிவப்பாயும், கறுப்பாயும், ஊதாவாயும் காணப்படலாம். ஒளியாயும் காணப்படலாம். ஆனால் இந்த உலகத்திலாவது, வனத்திலாவது, சமுத்திர ஜலத்திலாவது அதை ஒத்தது ஒன்றுமில்லை. நட்சத்திரம், மேகம், மின்னல் இவற்றிலும் அதன் சொரூபம் காணப்படுவதில்லை. வாயு மண்டலத்திலும், தேவர்களிலும், சந்திர சூரியர்களிலும் இல்லை. ரிக்கு, யஜுஸ், சாமம், அதர்வணம் என்கிற வேதங்களிலுமில்லை. நிதந்தரத்திலும், பார்ஹத்ருதத்திலும், யாகங்களிலும் காணப்படுவதில்லை. யோசித்து அறியப்படாததாய் அறிவுக்கும் அப்பாற்பட்டதா யுள்ளது. பிரபஞ்சத்தை நாசம் பண்ணுகிறவன்கூடப் பிரளயகாலத்துக்குப்பின் அதில் லயமாகிறான். காணமுடியாததாய்க் கத்தி முனையைப்போல நுண்ணியதாயும், மலையைவிடப் பெருமனுயுமுள்ளது. காணப்படுகிற எல்லாவற்றுக்கும் ஆதாரமாயுள்ளது. அது விகாரமில்லாதது. அதுவே இந்தப் பிரபஞ்ச சொரூபம். அகண்டமானது. ஆனந்தமாயுள்ளது. எல்லாப்பிராணிகளும் அதிலிருந்து தோன்றி அதிலேயே லயிக்கின்றன. அது தொந்தங்களற்றது. அதுவே பிரபஞ்சமாய் விரிகிறது. எங்கும் வியாபித்திருப்பது. அதை விவரித்துச் சொல்லுகிறபோது வார்த்தை வேறுபாடே தவிர அதற்கு யாதொரு வேறுபாடு மில்லையென்று கற்றோர்கள் சொல்லுகிறார்கள். உலகம் எதில் நிலைபெற்றிருக்கிறதோ அந்தப் பிரமத்தை அறிந்து ஞானிகள் மோட்சத்தை அடைகிறார்கள். துக்கம், கோபம், பொருளாசை, காமம், அறியாமை, சோம்பல், பொறாமை, தன்னயம், ஒழியாத ஆசை, எரிச்சல், மாயம், கொடுஞ்சொல் இந்தப் பனிரண்டும் மனிதர்களுடைய உயிரைப் போக்குகிற பெரிய தோஷங்களாம். இவைகளில் ஒவ்வொன்றும் மனிதனைப்பற்றச் சமையம் பார்த்துக்கொண் டிருக்கிறது. மனிதர் இவைகளால் துன்பமடைந்து, அறிவிழந்து போகிறார்கள்.

(தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

உ

சிவமயம்




## வாதவூரடிகள் ஞானோபதேசம் பெற்ற வரலாறு.

(455-ம் பக்கத் தொடர்ச்சி.)

### நாடு.

15. புண்ணிய வெண்ணீ றாய பொருவரு கவசம் பூண்டு
கண்ணிய பத்தி வைராக் கியமெனும் படைகை யேந்தி
யெண்ணிய சரியை யாதிச் சேனைநான் கெழப்ப ரப்பித்
திண்ணிய சனனத் தெவ்வைச் செறுவது பாண்டி நாடு.
(திருப்பெருந்துறை-நாட்டு. 9.)

16. முருகன் சங்கத் திருப்பவனம் முக்கட் கடவு ணிற்பவன்வா
ளரசன் புயலை விலங்கிட்டோ னனலும் புனலு மியலறியும்
புராண மதுர மானபுரம் புல்வாய் புலியின் முலையுண்ணு
நரியும் பரியா நதியிதழி மணக்குங் கன்னி நன்னாடு.
(திருவாலவாயுடையார்-நாட்டு. 3.)

### நகர்.

17. இருந்தவர் துதிமு ழக்கு மிகற்கரி பரிமு ழக்கும்
பொருந்தவிண் ணவர்கள் வந்து போதலிற் படுமு ழக்குந்
திருந்தமற் றெழுமு ழக்குஞ் செயிரறத் துஞ்சும் போது
மருந்தமிழ் முழக்குந் துஞ்சா தாலவா யென்னு மூதூர்.
(திருப்பெருந்துறை-அமைச்சுரிமை. 3.)

18. விழவொலி கண்ப டாது வீதியின் மிஞிறும் வண்டு
முழவொலி கண்ப டாது தொங்கலி னுவக்குஞ் செவ்வாய்
மழவொலி கண்ப டாது மாடத்தி னரங்கந் தோறு
முழவொலி கண்ப டாது முத்திகண் படுக்குங் கூடல். (ஷை - ஷை 4.)

19. எதிரினம் மிறைகு லத்து முதலிலங் கிரதந் தோற்றுங்
கதிர்பொரா திளைத்துக் கூனுங் கைக்கொடு நரைத்து வானத்
ததிர்வுற வியங்குந் தாங்க லறமென மாட முன்னாற்
பிதிர்வறத் தாங்கி யுய்க்கும் பெரும்புகழ் மதுரை மூதூர். (ஷை - ஷை 2.)

20. திருவால வாயென்று கேட்டவரே யறம்பெறுவர் செல்வ மோங்குந்
திருவால வாயென்று நினைத்தவரே பொருளடைவர் தேவ தேவைத்
திருவால வாயிடத்துக் கண்டவரே யின்பநலஞ் சேர்வ ரென்றுந்
திருவால வாயிடத்து வதிந்தவரே வீட்டுநெறி சேர்வ ரன்றே.
(பர-திருவிளை-தலவிசே. 6.)

21. சுரநதிசூழ் காசிமுதற் பதிமறுமைக் கதியளிக்குந் தூநீர் வையை
வரநதிசூழ் திருவால வாய்சீவன் முத்திதரும் வதிவோர்க் கீது
திரனதிகம் பரகதியும் பின்கொடுக்கு மாதலினிச் சீவன் முத்தி
புரனதிக மென்பதெவ னதற்கதுவே யொப்பாமெப் புவனத துள்ளும்.
(பர-திருவி-தலவிசே. 7.)

22. பூழி யகழ்ந்த குழிநிரப்பும் புலவ ரமல னெடுமலைவோ
ராழி யேழு மொருதடத்தி லமரு மதுவோ வுலகேழுஞ்
சூழு மூன்று முலையிருமை யொருபெண் பிறந்து சோதியுடன்
வாழு மதுரை வளங்கூற யாமார் மறந்து மாநிலத்தே.
(திருவாலவாயுடை-நகரச். 16.)

அரசன்.

23. திகழ்பெரும் பாண்டி நாட்டின் றிருமுக மாகி யென்றும்
புகழ்மிகு மனைய கூடல் புரப்பவ னூறுற் றூலு
நிகழ்தரு தண்மை நீங்கா நிலாமதிக குலத்து வந்தா
னகழ்மறத தினன்கு லேச னருந்தவத துதித்த நீரான்.
(திருப்பெருந்துறை-அமைச்சுரிமை. 5.)

24. அருளுரு வாய செல்வி யங்கயற் கண்ணி யோடுந்
தெருளுற வமருஞ் சுந்த ரேசர்தந் திருத்தாட் கன்பும்
பொருள்பெறு தமிழு மோவாப் புகழுநன் னீதி யாவு
மருளறத் தவஞ்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லான.
(திருப்பெருந்துறை-அமைச்சுரிமை. 6.)

25. எங்கணும் வியாபித் துள்ளா னிவனென வறியா ராகித்
தங்களுள் வேறுவேறு பிதற்றுவார் தவாநாண் கொள்ள
வங்கையிற் பிரமபு கொண்டே யறிவிக்கு மறிவான் மிக்கான்
கங்கையிற் பொலியுந் தூய்மை கருத்துறத் திருத்தி ஞனல்.
(திருப்பெருந்துறை-அமைச்சுரிமை. 7.)

26. திரிபற வனைத்து நூலுந் தெரிந்தவன் பகைவர் தம்மைப்
புரிசினக் களிற்றிற் சிங்கம் புகுந்தெனப் புடைக்கு மாற்று
லரிமருத் தனனெ னும்பேர் பெற்றவ னவனி யெல்லாம்
பரிவறச் செங்கோ லுய்த்துப் பண்பொடு வாழு நாளில்.
(திருப்பெருந்துறை-அமைச்சுரிமை. 8.)

வாதவூர்.

27. வரைவளைய நடுப்பொலியு மாநிலமா மடக்கொடிக்குப்
புரையிறிரு முகமாகும் பூழியர்கோ மான்றிருநா
டுரைசெயுமம முகக்கண்ணு யொளிர்தருங்கா விரியினுநீர்
கரையறமே லெழும்வையைக் கரையுளதாம் வாதவூர்.
(திருப்பெருந்-திருவவதார. 2.)

28. ஆதியா தித்தன் சோம னக்கினி தமது பேரால்
வேதியர் தமைவந் தேத்தி விளம்புமுன் னுகங்கண் மூன்றுங்
காதலின் வணங்கக் கண்டு கடையுகம் வாத ராச
னீதியின் வணங்க வாத புரமென நிகழு மூதூர்.
(திருவால ஞானோப. 4.)

29. சிறவாத நெறியகற்றிச் சிறந்தநெறி யினைநிறுத்தி
மறவாத வன்புகொடு மண்ணொடுவான் றுதித்துய்யப்
பிறவாத நெறியடைந்த பெருநதகைமு னவதரித்த
வறவாத வூர்ப்புகழை யாமேயோ வறைகிற்போம்.
(திருப்பெருந்-திருவவதா. 15.)

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.






## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

(460-ம் பக்கத் தொடர்ச்சி.)

### " சித்திரம் பேசேல் "

" சித்திரம்—(பொய்யை மெய்போலக் காட்டிப் பேசும்) அலங்காரமான வார்த்தைகளை, பேசேல்—(நீ) பேசாதே " என்பது இதன்பொருள்.

சிலர், தங்களை ஆதரித்துவரும் பிரபுக்கள் மகிழ்ச்சியடையும் பொருட்டும், மறற மனிதர்கள் கேட்டு ஆனந்திக்கும் பொருட்டும் உலகத்தில் நடவாத காரியங்களை நடந்தவைபோல அலங்கரித்துப் பேசுவார்கள். அவற்றைக்கேட்டு எல்லோரும் ஆனந்திப்பார்கள். அப்படி ஆனந்தித்து வந்தாலும் ஒருகாலத்தில் சிததிரம் பேசும் அவர்களுடைய பொய் வெளிப்பட்டுவிடும். அப்போது அவர்கள் மிகுந்த மானக்கேட்டையும், கெடுதலையும் அடைவார்கள். அவ்வாறு கேடடைந்தவர்களுடைய கதைகள் பலவுண்டு. அவற்றுள் ஒன்றை இதனடியில் விளக்குவாம் :

ஒருநகரத்தில் செல்வத்திற் சிறந்த பிரபு ஒருவர் இருந்தார். அவர் வேடிக்கையான காரியங்களிலேயே எப்பொழுதும பொழுதுபோக்கக்கூடியவர்; அதனால் அவர் விநோதமாகப் பேசுவோர் பலரைத் தம்மிடம் வேலைக்காரராகச் சேர்த்துவைத்திருந்தார். அவர்கள், பொய்யும், மெய்யுங் கலந்த பல விநோதவார்த்தைகளையே எப்போதும் பேசி வருவார்கள். அவர்களுடைய அலங்காரவார்த்தைகளைக் கேட்டு அந்தப்பிரபு ஆனந்தக்கடலில் மூழ்குவார். அவரிடமிருந்த விநோதப் பேச்சுக்காரர்களில் சின்னப்பா என்பவன் சிறந்தவனாயிருந்தான். அவன் பேசுங் காரியங்களில் மெய் சிறிதுமிராது; பொய்யையே அவன் மிகுதியும் பேசுவான். பிரபுக்களாயிருப்பவர்கள் எதிலும் உண்மையை விசாரித்துணராமல் தம்மையடுத்திருக்கும் வாய்ப்பகட்டுக்காரரின பொய்யலங்கார வார்த்தைகளைக்கேட்டு மகிழக்கூடியவர்களாதலால், மேற்கூறிய பிரபு சின்னப்பா கூறும் பொய் வர்த்தமானங்களைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்து வந்தார்.

அவன் ஒருநாள் அவரிடத்தில், "பிரபு அவர்களே ! சமீபத்திலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு குடித்தனக்காரனுடைய வயலில் ஒருவாழை நான்கு தாறுகளை ஈன்றிருக்கின்றது; தினந்தோறும் பல மனிதர் அங்கேவந்து இந்த அதிசயத்தைப் பார்த்துப் போகிறார்கள்; நானும் பார்த்து வந்தேன்; இது கலிகால அற்புதம்" என்று நடவாத ஒரு பொய் வர்த்தமானத்தைக் கூறினான். அப்பிரபு, "நாமும்போய் அதைப் பார்த்து வருவோம்" என்றார். அவர் அப்படிப் புறப்பட்டு அந்த இடத்திற்குப் போனால் தன்னுடைய பொய் வெளியாகிவிடுமென்று சின்னப்பாவுக்குத் திகிலுண்டாகிவிட்டது. அதனால் அவன், அவரை அங்கே போகவிடாமல் தடுத்துவிடக்கருதி, அவரைநோக்கி, "இந்த அற்பக்காரியத்திற்காக நீங்கள் வரவேண்டியதில்லை; என்னிடம் பத்து ரூபாய் கொடுத்தால் நான் அதைக்கொண்டுபோய் அந்தக் குடித்தனக்கார

னிடம் கொடுத்து அந்த வாழையை அடியோடு வெட்டிக்கொண்டு வந்துவிடுவேன்'' என்றான். பிரபு அதற்குச்சம்மதித்து அவனிடம் பத்து ரூபாய் கொடுத்தார். அந்த வாழை உண்மையாகவே இருந்தால்தானே அவன் சொன்னபடி அதைக் கொண்டுவருவான்? அஃதங்கே இல்லாதபடியால், அதற்காகச் செய்யவேண்டிய ஒரு தந்திரத்தை முடிவுசெய்துகொண்டு உடனே அந்த ரூபாயைக் கொண்டுபோய்த் தன்னுடைய வீட்டில் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு வீட்டைவிட்டு வெளியேறாமல் ஒருநாள் முழுதும் படுத்திருந்து மறுநாள் வெளியேறி முகவாட்டத்துடன் அந்தப் பிரபுவிடம்போய், "ஐயோ! 'கைக்கெட்டினது வாய்க்கெட்டாமற் போய்விட்டது'; நான் அந்தக் குடித்தனக்காரனிடம் ரூபாயைக் கொடுத்து வாழையை அடியோடு வெட்டியெடுத்துத் தலையில் வைத்துச் சுமந்துகொண்டு சந்தோஷத்துடன் சாலை வழியாக வந்தேன்; ஒரு கோவில் யானை எதிரில் வந்தது; அது என் சமீபத்தில் வந்தவுடன், தலையிலிருந்த வாழைமரத்தைக்கண்டு தின்ன விரும்பித் தும்பிக்கையால் அதைப்பிடித்திழுத்து வாயில் வைத்து மென்று தின்றுவிட்டது; அதன் வாயில் சென்ற வாழையை மீட்டுக்கொண்டுவர என்றால் முடியவில்லை; தங்களுக்கு அதை நான் காட்டியிருந்தால் திருப்தியாயிருக்கும்; அவ்வாறு திருப்தி யேற்படுவதற் கிடமில்லாமல் அந்த யானை செய்துவிட்டது; நான் இங்கே வருவதற்கே எனக்கு மிகுந்த வெட்கமாகி விட்டது'' என்று பெரும் புளுகு புளுகினான். பிரபு அவனுடைய வார்த்தைகளை மெய்யென்றே நம்பி, "அதுபோனால் போகிறது'' என்று அவனுக்குச் சமாதானங் கூறி, அவன், நான்கு குலையீன்ற வாழைமரத்தைக்கண்டு வந்து சொன்னதற்காக மகிழ்ச்சி யடைந்திருந்தார். இப்படியே அவன் பல தினங்களிலும் பல கட்டுக் கதைகளைச் சொல்லி அவரிடம் பணம் பறித்துக்கொண் டிருந்தான்; அவரும் தம்முடைய பேதைமைத்தனத்தால் அவன் வார்த்தைகளை நம்பி மகிழ்ச்சி யடைந்து வந்தார்.

இப்படி அவன் பொய்க்கதை கூறுவதில் பேர்பெற்றவனாய் வாழ்ந்து வருங்காலத்தில் ஒருநாள் ஒரு பெரும் பொய்கூறத்தொடங்கி, ஒரு புதிய ரோஜா புஷ்பத்தைக் கொண்டுவந்து அந்தப் பிரபுவிடம் கொடுத்து, "மகாப் பிரபு அவர்களே! இந்த ரோஜா மலரினுடைய சரித்திரம் மிக்க விநோதம் பொருந்தியது; இஃதொரு மல்லிகைச் செடியில் பூத்திருந்தது; தங்களைப் போன்ற ஒரு பிரபு இந்தச் செடியை அன்னியநாட்டிலிருந்து வரவழைத்து மிக்க அருமையாக வளர்த்து வருகிறார்; அவருக்கும் எனக்கும் மிகுந்த சிநேகமுண்டு; அதனாலேயே இந்த அருமையான புஷ்பத்தை அவர் எனக்குக் கொடுத்தார்; இது தங்களுக்கே உரியதாகுமென்று நான் இதைத் தங்களிடம் சேர்ப்பித்தேன் ; ஒரு சாதிச் செடியில் மற்றொருசாதி மலர் தோன்றுவது மிகவும் அற்புதமான செய்கையல்லவா?'' என்று சொன்னான். பிரபு மிக்க மகிழ்ச்சியோடு அந்தப் பூவைக் கையில் வைத்துக்கொண்டு, "ஓ! இஃதவ்வளவு அதிசயமான மலரா? இந்தச் செடியை வளர்த்துவரும் பிரபு யார்?'' என்றார். அதற்குச் சின்னப்பா, "சதுர்வேதமங்கலத்திலுள்ள சங்கரலிங்கம் பிள்ளையென்பவர் தம்முடைய தோட்டத்தில் இச்செடியைவைத்து வளர்த்து வருகிறார்'' என்றான். சதுர்வேதமங்கலம் என்பது சுமார் பத்துமைல் தூரத்திலுள்ள ஊர்; அவ்வூர்ச் சங்கரலிங்கம் பிள்ளையைப்பற்றிச் சின்னப்பா கேள்விப்பட்டிருந்தான்; ஆனால் அவருடைய பழக்கமே அவனுக்கில்லை; அவர் அத்தகைய விநோதச் செடியைவைத்து வளர்க்கவுமில்லை. அப்படியிருந்தும் அவர் நெடுந்தூரத்திலுள்ள ஊரிலிருப்பவராதலால், அங்குள்ள மேற்படி விநோதச் செடியைப்பற்றிய வரலாற்றை அந்தப்பிரபு அவரிடம் விசாரித்

துத் தெரிந்துகொள்ளமாட்டாரென்று தீர்மானித்தே இவ்வாறு தைரியமாக அந்தச் சின்னப்பா சிததிரமாகப் பொய் கூறினன்.

அந்தச் சங்கரலிங்கம்பிள்ளை யென்பவரோ மேற்கூறிய பிரபுவுக்கு மிகுந்த சிநேகமுள்ளவர்; சின்னப்பாவின் கெட்டகாலத்தால் அவர் அங்கே வந்திருந்தார். சின்னப்பா, அவர் பெயரைச் சொன்னவுடனே அந்தப்பிரபு அவரை நோக்கி, "ஓகோ! இந்த விநோதச்செடி உங்களால்தான் வளர்க்கப் பட்டு வருகிறதா? அதில் பதியன்கள் உண்டாக்கி எனக்கொரு செடி தர வேண்டும்" என்றார். சின்னப்பா சொன்னதையும், அந்தப் பிரபு கூறியதை யும் சங்கரலிங்கம்பிள்ளை கேட்டுச் சிரித்து, "ஐயோ! இந்த மனிதன் பெரிய புளுகு புளுகுகிறான்; நான் அப்பேர்ப்பட்ட செடியை வரவழைக்கவுமில்லை. என்னுடைய தோட்டத்தில் வைத்து வளர்க்கவு மில்லை" என்றார். உடனே அந்தப் பிரபுவுக்குச் சின்னப்பாவின்மீது மிகுந்த கோபமுண்டாகிவிட்டது, அவர், "இந்த அயோக்கியன் இதற்கு முந்தியும் நம்மிடம் பல பொய்களைக் கூறிப் பணம் பறித்திருக்கிறான்; நாம் இவன் முகத்திலும் விழிக்கக்கூடாது" என்று அவனை உதைத்துத் துரத்திவிட்டார். அவன் பொய்யன் என்ற சமா சாரம் எங்கும் பரவிவிட்டது. அதனால் வேறே எவரும் அவனை வேலைக்குச் சேர்த்துக்கொள்ளவில்லை. முடிவில் அவன் சோற்றுக்கு வழியின்றித் துன்ப முற்றான். (தொடரும்.) செம்பூர் வீ. ஆறுமுகஞ் சேர்வை.

## சிறு வைத்திய முறைகள்.

1. கால் வெடிப்பு நீங்க:—நண்டின் ஓட்டைக் கருக்கி விளக்கெண் ணெயில் மர்த்தித்துத் தடவவும்.

2. வண்டு கடிக்கு:—தேங்காய்த் தோட்டை (கொட்டாங்கச்சியை)ச் சுட்டு, ஓர் இரும்புத்தகட்டின் மேல் சிறிது நேரம் வைத்திருந்து பின் அதிற் படிந்துள்ள தைலத்தை எடுத்துத் தடவவும்.

3. ஒற்றைத் தலைவலி தீர:—வெள் உள்ளியை மென்று, வலது பக்கம் வலித்தால் இடதுகை மணிக்கட்டிலும், இடது பக்கம் வலித்தால் வலதுகை மணிக்கட்டிலும் வைத்துக் கட்டவும்.

4. கண்வலி தீர:—பனங் குருத்தைத் தட்டிச் சாறு பிழிந்து காலையி லும் மாலையிலும் கண்ணில் ஊற்றவும்.

5. சிலந்தி ஆறுவதற்கு:—கரும் பிரண்டை இலையை விளக்கெண் ணெய் தடவி விளக்கெண்ணெய் விளக்கிலேயே வாட்டிப் போடவும்.

K. S. வீராசாமி செட்டியார், செவிந்திபாளையம்.

## நெருப்புப்பட்ட காயங்களுக்கு மருந்து.

தேகத்தில் எந்தப்பாகத்திலாவது நெருப்புப்பட்டுப் புண்ணானால் உடனே சோப்புப் போட்டுத் தேய்த்தால் சுத்தமாய்விடும். பிறகு வலி தீர்ந்துவிடும். புண்ணின்மேல் லின்சிட் எண்ணெயைத் தடவி அதன்மேல் கோதுமை மாவைத் தூவவும். லின்சிட் எண்ணெயும் மாவும் சேர்ந்து உலர்ந்தவுடன் மறுபடியும் எண்ணெயும் மாவும் போட்டு வரவும். தோல் நன்றாய் மூடும் வரையில் இப்படிப் போடவேண்டும். பிறகு அந்த மா, தானாகவே உலர்ந்து கீழே விழுகிறவரையில் ஒன்றும் செய்யக்கூடாது. இதுமாதிரி செய்தால் புண் ஆறிப் புதுத்தோல் உண்டாகும். புண்ணின் தழும்பு ஒன்றும் தெரி யாது. P. A. V. அய்யர், திருப்பத்தூர், N. A.




## மாதரும் குடும்பமும்.

(462-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிறருடைய குறைகளைக் கூறும்போது யாவர்க்கும் சந்தோஷம் உண்டாகின்றது. தங்கள் குற்றங்களைப் பிறர் பேசினால் அளவுகடந்த கோபமுண்டாகின்றது. இதுவே உலகிற் பெரும்பாலோர் வழக்கம். ஆனால் அறிவாளிகள் பிறர் குற்றத்தைப்போல் தம் குற்றத்தையும் நோக்குவர். இது தான் சாமானியருக்கும் அறிவாளிகளுக்குமுள்ள தாரதம்மியம்.

"ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு."

என்றார் நாயனாரும். உன் கண்ணின்மேல் உத்தரத்தை வைத்துக்கொண்டு அன்னியன் கண்மேலிருக்கும் துரும்பைக் கவனிக்கிற தென்ன? உன் கண்ணின்மேலுள்ள தூலத்தை யெடுக்க வழிதேடாமல் உன் சகோதரன் கண்மேலுள்ள துரும்பை யெடுக்க வகை தேடுவ தென்ன? என்றார் ஏசுநாதர்.

புருஷர் வைப்பு வைத்துக் கொள்ளலாம் என்பது பலர் தப்பான அபிப்பிராயம். அபிப்பிராயமிருக்கிறதோ இல்லையோ அனுஷ்டானத்தில் குறைவில்லை. நம் வீட்டுப்பாட்டிகளும், 'அவனுக்கென்ன ஆண்பிள்ளை; ஆயிரம் வைப்பாட்டிகளை வைத்துக்கொள்வான்; அவனைக் கேட்பார் யார்?' என வாய்கூசாது கூறுவது நம் நாட்டில் சாதாரண வழக்கம். சிலர் இரகசியமாக இதில் ஈடுபட்டிருப்பர். சிலர் பகிரங்கமாகவே வைப்பாட்டியை ஓரிடத்தில் குடியேற்றி அந்தக் குடும்பச் செலவுகளை யெல்லாம் தாங்களே ஏற்றுக் கொண்டு நடத்திவருவர். மற்றுஞ் சிலர் தாராளமாகத் தங்கள் வீட்டிலே தானே அவளை அழைத்து வந்து வைத்துக்கொள்வர். சிலர் தாசி வீடுகளையே தஞ்சமாக அடைந்திருப்பர். அவர்கள்மேற் கொண்ட மோகத்தால் தம் மனைவியரைக் கண்ணெடுத்தும் பாராமல் அவளைத் தவிக்கவிடுவோர் சிலர். ஆஸ்தியெல்லாம் கூத்திக்கிட்டு நாஸ்தியாக்கிக் குரங்குபோல் விழிப்போர் சிலர். இன்னும் எத்தனையோ வகையில் இத்துர்ச் செய்கைக்குள்ளானோருடைய தொகை எண்ணத்தொலையாது, ஏடடங்கொள்ளாது. நூற்றில் ஒருவரோ இருவரோ இக்கொடிய செய்கைக்காளாகா திருப்போர். இதை வாசிக்கும் நண்பர்கள் தங்கள் கள்ள வொழுக்கத்தை வெளியிடா விட்டாலும், 'நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை' யாகையால், தங்கள் மனத்தைத் தாங்களே தொட்டுப் பார்த்துக்கொண்டு தங்கள் பரிசுத்தத் தன்மையையும் அபரிசுத்தத் தன்மையையும் அறிந்து குற்றம் தங்களிட மில்லாதிருந்

தால் அதற்காகச் சந்தோஷிக்கவும், தங்களிடம் இத்தகைய குற்றமிருந்தால் அதற்காகத் துக்கித்து அக் குற்றத்தைக் களையவும் வேண்டும்.

இதில் மற்றுமோர் விசேஷம் யாதெனில்:-இது ஒரு குற்றமெனக் கொள்ளாமையே. அநேகர் இதைப் பிழையென்று எண்ணுவதே யில்லை. தவிர, இதை ஒரு பெருமையாகவும் கௌரவமாகவும் கருதும் மூடமதிகளும் பலர் உண்டு. நண்பர்களே! வைப்பாட்டியை வைத்துக் கொள்வதென்பது எவ்வளவு அநியாயமும் அக்கிரமுமான காரியமென்பதைச் சிந்தித்துப் பாருங்கள். விபசாரமென்பது ஸ்திரீகளுக்கு மட்டுந்தானோ? ஆடவர்க்கில்லையோ? பக்ஷபாதமின்றி நடுநிலையினின்று யோசித்துப் பாருங்கள். தன் கணவன் வேறொரு ஸ்திரீயைக் காதலித்திருக்கிறா னென்பதை யறிந்தால் அவன் மனைவியின் மனம் என்ன பாடுபடும். ஆடவர் மனம் வேறு; மாதர் மனம் வேறோ? பொறாமை என்னும் குணம் யாவர்க்கும் சாதாரணமாக வுள்ளதே யாகும். சிறு குழவிப் பருவத்திலேயே தோன்றுகிறது. ஒரு தாய் ஒரு குழந்தைக்கு ஒரு வஸ்துவைக் கொடுத்தாளென் றறிந்தால் இரண்டே வயதுடைய மற்றொரு குழந்தை புரண்டு புரண்டு அழத் தொடங்குகின்றதே. தன்னினும் தன் தம்பியினிடம் தகப்பன் மெத்த அன்புள்ளவனா யிருக்கிறா னென்றறிந்ததும் ஒருவன் அடங்காக் கோபமூண்டு சண்டையிடத் தொடங்குகிறானே. இது உயிர்களுக்கு இயற்கையாயிற்றே. இங்ஙனமாக, தாம் வேறொரு மாதிடம் பிரியம் வைத்திருப்பதை யறிந்தால் தம் மனைவியர்க்கு எவ்வளவு மன வெரிச்ச லுண்டாகும் என்பதை அத்தகைய ஒழுக்கமுள்ள ஒவ்வொருவரும் சிந்திப்பாராக. கம்பராமாயணத்தில் ஆற்றுப் படலத்தில் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் முதல் செய்யுளில் அந்நாட்டினரின் குணங்களைக் கீழ்வருமாறு கூறி யிருக்கின்றனர்.

"ஆச லம்புரி யைம்பொறி வாளியுங்
காச லம்புமு லையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம்."

(இ-ள்.) 'ஆடவர்களுடைய பஞ்சேந்திரியங்களாகிய பாணங்களும், மாதர்களின் கண்ணென்கிற அம்பும் துன்மார்க்கத்திற் செல்லாத கோசல நாட்டை அலங்கரிக்கின்ற சரயு நதியின் அழகைச் சொல்லுவோம்' என்பது.

இதில் காணப்படும் விசேஷ மென்னவெனில், ஆடவரும் மகளிரும் அக்கினி சாட்சியாக மணந்த தமது மனைவி கணவன்மாரிடத்தே தாம் அன்பு செலுத்தி இன்ப மனுபவிப்பதன்றி, பிறர்மனை நயத்தல், பரபுருஷரைச் சேர்தல் என்ற தீச்செயலிற் செல்லாதிருக்கும் தன்மையை யுடையது கோசல நாடு என்பதாம்.

இதனால் ஸ்திரீ புருஷர்களுடைய லக்ஷணமாவ தென்னெனில், புருஷர் தம் மனைவியரை யன்றிப் பிற மாதரை விரும்பாதிருத்தலும், ஸ்திரீகள் கணவரை யன்றிப் பரபுருடரை விரும்பாதிருத்தலுமே யாகும்.

விபசாரமென்பது ஸ்திரீகளுக்கு மாத்திரமல்ல, புருஷருக்கு முள்ளதே யாகும். ஸ்திரீ விபசாரம் எத்தகைய குற்ற முடையதாகுமோ அத்தகைய குற்ற முடையதே புருஷ விபசாரமும்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாஸன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---




(467-ம் பக்கத் தொடர்ச்சி)

## இந்தியக் காப்பி உற்பத்தி.

**ப**யிரிடுவதுதான் காப்பித் தொழிலின் முக்கியாம்சமாயுள்ளது. அக்காலை ஜீவாதாரமான வேரை முறித்துவிடாமல் வெகு ஜாக்கிரதையாக நாற்றுகளைப் பறிக்கவேண்டும். அவ்விதஞ் செய்ய முதல் வரிசை நாற்றுகளினோரத்தில் நேராக ஒன்பது அல்லது பத்தங்குல ஆழமுள்ள சுரங்கம் போன்ற (துவாரம்) ஒரு நேர் பள்ளத்தைப் பறிக்கவேண்டும். அப்பால், அதன் வழியாக ஓர் கோலைவிட்டு அழுத்தினால் அப்பயிர்கள் முன்னே சாய்ந்துவிடும். அதன்பின் அக்கோலை மெல்ல வேர்களிற்

**பயிர் நடும் வகை**

படாவாறு வெளியே எடுத்துவிட்டால் பயிர்கள் வேருடன் நடுதற்குரிய நிலையினவாயிருக்கும் அந்நாற்றுக்களின் வேர்களில் முன்பு கூறியவாறு, ஈரமாயுள்ள அந்நிலத்தின் மண் ஒட்டுகிற வரையில் அப்படியே சோத்துச் சூரிய வெப்பம் படாமல் ஓர் நிழலில் வைத்துப் பாதுகாக்கவேண்டும்.

இந்நாற்றுக்களைத் தோட்டங்களில் நடுங்கால் அவற்றின் வேர்களை நெருக்காமல் நடுதல் வேண்டும். அதிலும் ஜீவியவேரை வளைக்காமல் நேராக வைத்து மண்போட்டு மூடிவிடவேண்டும். மூடிய பிறகு நாற்றை நேராக நிறுத்தி நிரம்பத் தண்ணீர் விடுதலவசியம். இதனால் வேர்கள்

**செடியின் வளர்ச்சி**

மண்ணை நன்றாகப் பற்றிக்கொள்ளுகின்றன. அப்பொழுது அப்பயிர் பூமிகுள் அதிகம் ஆழ்ந்துபோகாமல் பாதுகாக்க வேண்டும். தண்ணீர் ஊற்றுங்கால் இரண்டங்குலங்களுக்கு மேல், அவை பூமியிலாழலாகாது. அப்பயிரின் வோகள் தரையில் நனறாக ஊன்றும் வரை, அவற்றைப் பகற்காலங்களில் மூடிவைக்கவேண்டும். அப்பால், அவை ஓரடி உயரம் வளர்ந்தபின், காற்றின் வேகத்தாலவற்றினிளந் தண்டுகள் முறிந்துவிடாவண்ணம் அருகில் முளையடித்துக் (கொளுகொம்பு போல்) கட்டிக் காக்கவேண்டும்.

தொழிலாளர்கள் காப்பிச் செடிகள் நாலரை அல்லது ஐந்தடி உயரம் வளர்ந்த பின் அவற்றின் கிளைகளை நறுக்கிச் சரிப்படுத்துவார்கள். இதை எப்பொழுது எவ்வாறு செய்வதென்பதைப்பற்றிக் காப்பித் தொழிலாளர்களுள் பல அபிப்பிராயபேதங்கள உள. அடிமரத்தின் பலத்தை யதிகப்படுத்தவே செடியின் நாலாபக்கங்களிலும் வளர்ந்துள்ள கிளைகளை நறுக்குவது. முதன்மையானதும் முக்கியமானதுமான இம்முறை செடியின் நடுப்பாகத்தில், சுமார் ஆறு அல்லது எழு அங்குல இடை வெளியில் கிளைகளின்றிச் சுத்தப்படுத்துங் கருத்துடனே நடைபெறுகின்றது. இப்படிச் செய்வதால் செடிகளின்மீது சூரியவெளிச்சம் பரவவும், காற்றுச் சரிவர உட்

**கிளை வெட்டும் விதம்**

கொள்ளப்படவும் எதுவாயிருக்கும். இங்ஙனம் பல கிளைகளையும் ஆய்ந்து வெட்டிய பின்னும் அவை தளிர்விட்டு வளரவாரம்பிக்கும். அவ்வப்போது அவற்றைப் பருவம் பார்த்துத் தொழிலாளர் கத்திரித்து விடுவது வழக்கம். இதனால் செடிகளின் அடித்தண்டு வலுவடைந்து, அவ்வடிப்பாகத்திலுள்ள கிளைகளும் நன்றாக முதிர்ந்து

வளர்ந்து நிழற்றந்து பரவிப் பலன் தருகின்றது. சாதாரணமான மேற்கூறப் பெற்ற இம்முறையைக் கையாண்டு வருதலே போதுமானது.

இவ்விதம் நான்காண்டுகளாயினபின், தரையின் மேற்பாகத்திலிருந்து வேர்கள் வியாபிக்கத் தொடங்கும். அவற்றிற் கெவ்வித கெடுதியும் நேரா வண்ணம் காத்தல் அவசியம். அப்பொழுது இக்காப்பிச் செடிகள் அக்டோபர் மாதத் தொடக்கத்திலிருந்து டிசம்பர் மாத முதல்வாரம் வரையில் புஷ்பிக்கின்றன. வானம் காலாகாலங்களில் மழையை வழங்கினால் அவை பின்னும் சீக்கிரமாகவே மலர வாரம்பிக்கும், இல்லையேல் சில சமயங்களில் டிசம்பர் மாத முதற்பட்சம்வரை மலராதிருத்தலு மியல்பு. ஆனால் அப்படியிருத்தல் வெகு அபூர்வம். மழை சிறிது பொழியினும் அவை ஏராளமாகப் புஷ்பித்து விடுந் தன்மையன.

அப்பூக்களினின்று பிஞ்சுகள் தோன்றும். அப்பிஞ்சுகள் ஆண்டின் 'மே' அல்லது 'ஜூன்' மாதத்திற் பழுக்க வாரம்பிக்கின்றன. சில தோட்டங்களிற் பின்னுஞ் சீக்கிரமாகவே பழுத்தலுமுண்டு. பழுத்த அவற்றை, காய்ந்து உதிர்ந்தபின், பொறுக்கும் வேலை 'செப்டெம்பர்' மாத ஆரம்பம் முதல் 'டிசம்பர்' மாதத்தினிறுதிவரையில் நடைபெறும். சீக்கிரமாகப் பழுக்கின்ற பழங்கள் சிறியனவாகவே யிருக்கும். இவற்றைப் பொறுக்கும் வேலையும் அநேகமாக ஒரு பட்சத்தில் முடிவடைந்து விடும். அதன்பின்னிரண்டல்லது மூன்றுவாரங்கள் கழிந்தபின் தொழிலாளர் பழங்களை மறுமுறை பொறுக்குவார்கள். இந்த இரண்டாவது தடவையில் பயிரின் முக்கால்பங்கு செடிகளில் பலன் கிடைக்கும். இச்சிறுபழங்கள் பிரகாச சிவப்பு நிறத்தையோ அல்லது கருஞ்சிவப்பு வண்ணத்தையோ அடையும்போதுதான் தோட்டக்காரர்கள் (தொழிலாளர்) அவற்றைப் பொறுக்கக்கூடிய தக்க பருவமென ஓர்வர். அதன் சிறு பழங்களைப் பொறுக்கும் வேலை விரைவில் தொடங்கப்படும். கையிலப்பழத்தைவைத்துக் கட்டை விரலால் அழுத்தினால் கொட்டைகள் ஒன்றின் மேலொன்றாக நகருவதைக் காணலாம், இதில் இரண்டுவித முண்டு. அவை 'சேரி'(Cherry) யென்றும்,'பியா பேர்ரி' என்றும் பிரிக்கப்படும். அவற்றுள் 'செரி' யில் இரண்டு கொட்டைகளும், 'பியா பெர்ரி' யில் ஒரு கொட்டையும் காணப்படும். இவ்விதக் கொட்டைகள் ஒரு செடிக்குச் சுமார் 50 முதல் 80 பவுண்டு (lbs) வீதம் கிடைக்கும். அவற்றைச் சுத்தஞ்செய்தபின் சராசரியில் 40 பவுண்டு வீதம் பலனடையலாம். இச்செடிகளைப் பத்தாண்டுகட்கப்பால் அழித்துவிட்டுப் புதிதாகப் பயிர் செய்யத்தொடங்குதல் நலம். (பத்தாண்டுகட்குமேல் அச்செடிகள் பலஹீனமடைந்து சரியாகப் பயன்தரா)

பலனடையுங் காலம்

இங்ஙனம் இச்சிறு பழங்களைச் சேகரித்தபின், அவற்றின் மேற்றோலை நீக்கும் வேலை தொடங்கப்படும். இதைச் செய்வதில் பலர் பலவாறு கூறுவர். தொழிலாளர் அப்பழங்களை உலரவைத்து, அப்பால் தண்ணீரில் ஊறவைத்துக் கொட்டைகளைப் பிதுக்குவார்கள். இதற்குச் சாதாரண ஓர் கையந்திரம் உண்டு. அதற்குப் 'பல்லர்' என்று பெயர். இதன் முதலிரண்டு தொழில்களும் மிக்க சுலபமானவையாதலின் அவற்றைக்குறித்து இங்கு விரிவாக வரைய வேண்டியதில்லை. ஒன்றாக இணைக்கப்பெற்ற இரண்டு உருளைகளுக் கிடையில் பழங்களைக் கொஞ்சங் கொஞ்சமாக வைத்து கைப்பிடியி னுதவியால் சுற்றக் கொட்டைகள் பழங்களினின்று சுலபமாகப் பிதுக்கப்படுகின்றன. அவ்வுருளைகளினடியில் ஒரு தொட்டி, தண்ணீர் நிரப்பப்பெற்றிருக்கும். அதன்மேல் அரையங்குல கனமுள்ள ஓர் சல்லடை அந்தத் தொட்டியினோரத்தி லமைக்கப்பெற்ற இரண்டு கழிகளாற் றாங்குமாறு அமைக்கப்பெற்றிருக்கும். மேற்

ேரலிலிருந்து கொட்டையை வேறுபடுத்தத்தான் அப்பழங்கள் தண்ணீரில் கலக்கப்பெற்றிருத்தல் வேண்டும். அச்சல்லடையும் அடிக்கடி குலுக்கப்பட வேண்டும். கொட்டையானது ஆகர்ஷண சக்தியால் அடியிற் றங்க, மிதக்கும்தோல்கள் வெளியே எடுத்தெறியப் படுகின்றன. காப்பித்தோட்டமானது விஸ்தீரணத்தில், இரண்டு ஏகர்களுக்கு மேற்படாதிருக்குமானால் இம்முறை போதுமானது. கொட்டைகள் சுத்தமாயிருக்க, பறிக்கப்பட்ட நாளிலாவது அல்லது மறுநாளிலாவது தோலெடுக்கப்படவேண்டும். இரண்டு ஏகர்களுக்குமேல் பயிர் செய்வோர் 'டிஸ்க் அண்டு தி பிரஸ்டு பல்பர்ஸ்' (Disc and the breast pulpers) என்ற இயந்திரத்தைக் கையாளுவார்கள். சுலபமாகக் கொட்டைகளைத் தோலிலிருந்து வெளிப்படுத்த மிகுந்த தண்ணீரில் கொட்டைகள் ஊறவேண்டும்.

சுத்திசெய்யும் வகை

(தொடரும்) S. V. வரதராஜையங்கார், உறையூர், திருச்சி.

## வரதக்ஷிணை.

வரதக்ஷிணை என்பது வரனுக்குக் கொடுக்கும் தக்ஷிணையாம். இத்தக்ஷிணை பெரும்பாலும் பிரம்ம வைசிய குலங்களில் மாத்திரம் நடைபெறுகிறது. இது, மணமகனைச் சார்ந்தோர்க்குக் கொண்டாட்டத்தையும், மணமகளைச் சார்ந்தோர்க்குத் திண்டாட்டத்தையு முண்டாக்குகிறது. பெண்ணுக்கு வயது பத்தானதும் பெற்றோர்க்குக் கவலை பெருத்து விடுகிறது. சிலர் கடனும் வாங்கி விடுகிறார்கள். கடன் படுவதன்றி, கட்டமுது மூட்டையைச் சுமந்து மாப்பிள்ளைக்காக அலைந்து வருந்த வேண்டியதாயு மிருக்கிறது.

இவ்வாறு வலிய வரும் பெண் வீட்டாரைப் பார்த்ததும் பிள்ளை வீட்டார் கிராக்கி செய்கின்றனர். "எங்கள் பையன் அதிக புத்திசாலி; பி. ஏ. படித்திருக்கிறான்; அயன் நஞ்செயில் எட்டு ஏககராக்கள் உண்டு. ஆதலால், வரதக்ஷிணை அதிகமாகக் கொடுக்கவேண்டும்," எனப் பகருகின்றனர். பெரும்பான்மையும் தக்ஷிணை அதிகமாகக் கேட்பவர்கள், தனவந்தர்களும் படித்தவர்களுமே. தனவந்தர்கள் தமக்குச் சமான முள்ளவர்களிடத்தில் சம்பந்தம் செய்து கொள்கிறார்களே யொழிய, ஏழைகளிடம் சம்பந்தம் செய்து கொள்வதில்லை. எளியோர் வலியோராகக் கூடாது என்பது இவர்களது எண்ணம் போலும்.

மற்றும், இவ் வரதக்ஷிணையேயன்றி இவர்கள் சில சிறு தக்ஷிணைகளையு மேற்படுத்தி யுள்ளார்கள். அவைகளிற் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுவாம்:—

1. ஆவணி அவிட்டத்திற்கு 250 ரூபா விலையில் அரைநாண் வேண்டும்.
2. தீபாவளிக்கு ரூபாய் 200 விலையில் ஜவுளி வேண்டும்.
3. தைப்பொங்கலுக்கு மோதிரம் ரூபாய் 100 பெறுமான முள்ளதாய் வேண்டும்.
4. சாந்தி முகூர்த்தத்திற்கு ஜவுளி, மெத்தை முதலியவையோடு ரொக்கம் (Cash) 200 ரூபாய் வேண்டும்.

நண்பர்காள்! ஓர் பெண்ணுக்கே இவ்வாறிருந்தால், நான்கு ஐந்து பெண்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ? தற்காலம் இவ் வரதக்ஷிணை வழக்கம் மிகப் பரவி யிருக்கிறது. அதைத் தடுக்க அம்பலத்தாடுவோன் என்று அருள் புரிவானோ அறிகிலோம்.

K. S. வீராசாமிசெட்டியார், செவிந்தி பாளையம்.

# குறித்த காலம் தவறாமை.

ஒரு மனிதன் இம்மை மறுமையில் அடையக்கூடிய சகல சுகதுக்கங்களும் அவன் காலத்தை உபயோகப் படுத்துவதில்தான் அடங்கியிருக்கின்றன. இது பற்றி யன்றோ,

"ஞாலங் கருதினும் கைகூடும் காலங்
கருதி யிடத்தாற் செயின்."

என்றார் நாயனாரும். நிற்க காலத்தின் அருமை பெருமைகளை யுத்தேசித்தே நாயனார் தமிழ் வேதமாகிய திருக்குறள் என்னும் தம் நூலில் காலம் அறிதல் என ஓர் தனி அதிகாரமே கூறியுளாார்.

நம் ஆயுட் காலத்தில் அறியாமையுள்ள குழந்தைப் பருவத்தையும் யாதும் செய்ய இயலாத முதுமைப் பருவத்தையும் நீக்கிவிட்டால் மீந்த நாள் 40 அல்லது 50 வருட காலமாகும். இதிலும் நித்திரைக்கும் பிணிக்கும் இதர இடுக்கண்களுக்கும் செலவான நாட்கள்போக எஞ்சி நிற்குங் காலம் மிகச் சொற்பமானதே. இச் சொற்ப காலத்திற்குள்தான் நாம் செய்ய வேண்டியவற்றைச் செய்து பெற வேண்டியவற்றைப் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

நம் வாழ் நாட்களே காலத்தினு லாகியிருக்கிற படியால் அதை வீணுகக் கழித்தல் நம்மை நாமே கொலை செய்து கொள்ளலை யொக்கும். ஆக்ஸ் போர்டு கலாசாலையிலுள்ள ஒரு கடிகார யந்திரத்தின் மேல் அடியில் வருமாறு வரையப்பட் டிருக்கிறதாம்.

"காலமானது தன் பாட்டில் கழிந்து அதன் கொலைக் குற்றத்
தை உங்கள் தலைமேல் சுமத்துகிறது."

மேற்கண்ட வாக்கியத்தைப் பற்றிச் சிந்திக்குங்கால் வீண் பொழுது போக்கும் மனிதர்கள் எவ்வளவு திடுக்கிடத் தக்கவர்களா யிருக்கின்றனர். இது பற்றியே,

"நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்."

என்றார் திருவள்ளுவ நாயனார்.

நாம் எண்ணிய கருமங்களை இனிது முடிக்க ஓர் காலம் வந்து வாய்க்கும். நாம் அக்காலத்தை அறிந்து அதை இழந்துவிடாது அக்கணமே முயற்சி செய்து செய்தற்குரிய அரும்பெருங் காரியங்களைச் செய்து முடித்துக் கொள்ளவேண்டும். "காலமும் கடலலையும் மனிதனுக்காகக் காத்திரா" என்பதோர் ஆங்கிலப் பழமொழி. "ஐயர் வரும்வரை அமாவாசை காத்திருக்குமா" என்ற நமது பழமொழியின் கருத்தும் இதுவே யாகும்.

நாம் ஒரு வேலையைக் குறிப்பிட்ட காலத்தில் செய்வதாக ஒப்புக்கொண்டால் தவறாமல் அதை அவ் வேளையிலேயே செய்து முடிக்க வேண்

டும். ஒரு மனிதன் அனுசரித்து வரவேண்டிய நல்ல வழக்கங்களில் இதைக் காட்டிலும் சிறந்ததும் மேலானதும் முக்கியமானதும் வேறொன்றில்லை என்று திட்டமாய்ச் சொல்லலாம். இதனால் அடையும் பயன்களோ அனந்தம். இவ்வழக்கம் ஒரு மனிதனுக்கு இருக்குமாகில் அவனுக்குத் தன்னைத்தானே அடக்கியாளும் திறனும், வாய்மை தவறாதிருத்தலும், கடமையைச் செய்து முடிப்பதில் அவாவும் ஏற்படும். என்ன இடையூறுகள் நேரினும் அவன் அவற்றைப் பொருட்படுத்த மாட்டான். குறித்த காலத்தில் அக்கருமத்தைச் செய்தே தீருவான். சோம்பலென்பது அவன் இருக்குமிடத்திலும் இருக்குமோ? இராது. அவன் எப்பொழுதும் சுறுசுறுப்புள்ளவனாகவே இருப்பான்.

இரண்டொரு நாழிகை பிந்திப்போனாலென்ன என்று நம்மில் அநேகர் எண்ணுகின்றனர். ஒரு வினாடி பொறுத்துப்போனால் ரயில் வண்டி நிற்குமா? இன்னும், தூரமான இடங்களுக்கு அனுப்ப வேண்டிய அவசரமான தபாலை குறிப்பிட்ட நேரத்திற்கு ஒரு நிமிஷத்திற்குப் பின் தபால் பெட்டியில் போட்டால் அது மறுநாள் தபாலில்தானே சேரும். ஒரு நிமிஷம் பிந்தியதால் ஒரு நாள் வீணாகிறதன்றோ? அடியில் வரும் கதையே இதற்குத் தக்க திருஷ்டாந்தமாகும்.

புருஷ சந்ததியில்லாத கனவான் ஒருவர் தம் சகோதரியின் மைந்தன் ஒருவனைத் தத்தாக எடுத்து வளர்த்து வந்தார். அப் பையனிடம் எக் காரியத்தையும் குறித்த காலத்தில் செய்து முடிக்கும் வழக்கமே மருந்துக்குங் கிடையாது. மேற்கூறிய கனவான் ஒரு சமயம் நோயால் பீடிக்கப்பட்டு வருந்தினார். அவ்வமயம் அவர் மரண சாஸனம் ஒன்று பிறப்பிக்க நிச்சயித்து அயலூருக்குச் சென்றிருந்த தன் மருமகனை மறுநாள் காலை 10 மணிக்குத் தம்மிடம் வந்து சேரும்படி ஒரு ஆள் மூலம் சொல்லியனுப்பினார். அந்தப் பையன் சிறிதுநேரம் பொறுத்துப் போனாலென்ன? சொத்து நமமைத் தப்பி எங்கே செல்லும் என நினைத்து $10\frac{1}{4}$ மணிக்குப் போய்ச் சேர்ந்தான். பையன் குறித்த காலத்தில் வாராமையால் சொந்த விஷயத்திலேயே கவலையற்ற இச் சோம்பேறிக்குச் சொத்தைக் கொடுப்பதைவிட வேறு யாருக்கேனும் கொடுத்தால் பிரயோஜனமாகுமென எண்ணி அப்பிரபு வேறு சில சுற்றத்தார்களுக்குத் தம் ஆஸ்தி முழுவதையும் எழுதி வைத்துவிட்டுச் சிறிது நேரத்திற்குள் இறந்து போனார். பையன் கொஞ்சநேரம் பொறுத்துப்போய் நடந்த சங்கதிகளைக் கேட்டு ஆற்றொணாத் துயரை யடைந்தான். இவ்வாறே, எத்தனையோ வர்த்தகர்கள் குறித்த காலம் தவறியதால் அதிக திரவிய நஷ்டத்தை அடைந்திருக்கிறார்கள். பகல் காலமானால் பல கூகைகளை ஒரு காக்கை வென்றுவிடும்; இராக்காலமெனிலோ பல காக்கைகளை வெல்ல ஒரு கூகையே போதும் என்றாற்போல காலமே வலியாரை மெலியாராகவும் மெலியாரை வலியாராகவும் ஆக்கும் ஆற்றல் வாய்ந்தது.

காலத்தை வீணே கழிக்காமல் ஒவ்வொரு நிமிஷத்தையும் பயனுள்ளதாகச் செய்ய வேண்டும் காலத்தைக் காட்டிலும் விலையுயர்ந்த பொருள் உலகத்தில் வேறொன்றுமில்லை. ஆகையால் நாமனைவரும் இவ் வருமையான காலத்தை வெகு ஜாக்கிரதையாகச் செலவழித்து நம் தாய் நாடு, தாய்பாஷை முதலியவற்றிற்குப் பாடுபட்டு இம்மை மறுமைப் பயன்களைப் பெறுவோமாக.

A. சுருளியாண்டி கௌட ஆசிரியன்; கோம்பை.

# பொறாமை.

பொறாமையாவது பிறரது கல்வி, செல்வம் முதலியவற்றைக் கண்டு, பொறாமைப்படுதலாம். பொறாமை யுடையோன் தனக்குத் தானே துன்பத்தைத் தேடிக்கொள்ளுகிறான். தீயிடைப்பட்ட பதர் எரியுமாபோற் பொறாமையுடையோ னுள்ளம், எஞ்ஞான்றும் எரிந்த வண்ணமேயிருக்கும். ஆதலினாலே, அழுக்காறுடை-யவனுக்குத் தீமை விளைத்தற்கு வேறு பகைவர் வேண்டா; அவ்வழுக்காறே அமைந்த பகையாகும். அழுக்காறுடையான் உள்ளத்தில், இன்பம் எஞ்ஞான்றும் உதிப்பதில்லை.

அழுக்காறு எனுந் தீயகுணம் மாந்தருள்ளத்து இயல்பாய் உளதெனினும், அதனைக் கிளரவொட்டாது அறிவாற் றடுத்தல் வேண்டும். அஃதெங்ஙனமெனிற் கூறுதும்: பிறனொருவனது கல்வியைக் குறித்து நம் முள்ளத்தில் அழுக்காறு செனிக்குமாயின், நாம், நமது மனத்தை விளித்து, "ஏ, பேதை மனமே, நீ என் பிறன் கல்விமீது அழுக்காறுறுகின்றனை? அக் கல்வியை அவன் பெறுதற்கு எத்துணைச் சிரமமெடுத்தான் என்பதை யறிவையோ? அவன் தனக்குரிய ஏனைய கருமங்களை விடுத்து, காலமும் இடமும் வாலிதின் நோக்கி, நல்லாசிரியரை யடைந்து, வழிபட்டு, அவரேவிய தொண்டுசெய்து, அவர் குறிப்பின் வழிச்சார்ந்து, இருவெனவிருந்து, சொல்லெனச் சொல்லி, பருகுவனன்ன வார்வத்தனாகிச் சித்திரப்பாவையி னத்தகவடங்கிச் செவிவாயாக நெஞ்சுகளனாக, கேட்டவை கேட்டவை விடாதுளத்தமைத்து, மிக்கவேதனம் தக்கவாறுதவி, அக் கல்வியை அரிதிற் பெற்றனனன்றோ! நீயும் அங்ஙனம் முயல்வையேல் அக்கல்வியைச் சம்பாதித்தல் கூடுமே; அங்ஙனம் முயறலை யொழித்து, ஏன் அழுக்காற்றின்பாற் படுகின்றனை," என்று கூறி உள்ளத்தை அழுக்காற்றின் வழிச் செல்லவொட்டாது தடுத்தல் வேண்டும்.

இனி நமது உள்ளம் ஒருவனது செல்வத்தைக் குறித்துப் பொறாமை யுறுமெனின், அப்பொழுதும் நம்முள்ளத்தை நோக்கி, "ஏ, அழுக்காற்றி லொழுகும் இழுக்குடை யுள்ளமே, இத்துன்மதியை விடுதி; தன் மெய் வருத்தம் பாராது, கண்துஞ்சாது, பசிநோக்காது, எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளாது, செவ்வி அருமையும் பாராது, அவமதிப்புங் கேளாது தன் கருமமே கண்ணாக நின்றமையானன்றோ அவன் அத்துணைச் செல்வத்தை ஈட்டலாயினான். நீயும் அங்ஙனம் ஈட்டலில் முயலு; எதற்காகப் பிறன் செல்வத்தைக்கண்டு கொன்னே பொறாமை கொள்கின்றனை" என்று நம்முள்ளத்தை நாமே பொறாமை நெறியின்கட் செல்லவிடாது தடுத்தல் வேண்டும். இங்ஙனஞ் செய்யவல்லேமாயின் பொறாமையென்னுந் தீயகுணம் நமதகத்துப் பிறவாது. அழுக்காறுடையார் முகத்தைவிட்டுச் சீதேவிநீங்க, மூதேவி குடிகொள்வள்.

நமது நாட்டின்கண்ணே செல்வர்களும், கல்விமான்களும், உறையின் அஃது நமக்கும் பெருமையன்றோ! யாம் அந்நிய தேயத்தின்கட் புக்கவிடத்து, அங்குள்ளார் யாரேனும் நமது நாட்டைக் குறித்து நம்மை வினவுங்கால், "எமது நாட்டின்கண்ணே பல வித்வான்களுளர்; பல தனவந்தர்களுளர்" என்று பெருமிதத்துடன் அவருக்கு விடையிறுக்கலாமே. இங்ஙனமிருப்ப நாம் பிறர் கல்வி செல்வத்தைக்கண்டு, அழுக்காறுறுதல் இழுக்காமன்றோ?

*

சிலர் அழுக்காறெனும் கொடும்பாவியால் உந்தப்பெற்றுப் பிறர்க்குத் தீமை விளைப்பான்புக்குத் தாமே பெருந்தீமைக் காளாகின்றனர். இதற்கு ஓர் திருஷ்டாந்தம் இங்குத் தருகின்றோம்:

ஒரூரிலே ஒரு வணிகன் தன் மனோரதம் நிறைவேறும் பொருட்டு ஒரு தடாகக்கரையி லிருந்துகொண்டு காளிகாதேவியைக் குறித்துத் தவம் புரிந்தான். அதனை அறிந்த அவன் பகைவனான வேறோர் வணிகன், "இவன் மிக்க திரவியத்தை வேண்டித் தவம் முயல்கின்றான்; இவன் செல்வமுற யான் வாளா விருக்கலாமா? இவனைக்காட்டிலும் இருமடங்கு செல்வத்தைத் தேவியை நோக்கித் தவமியற்றி யான் பெறுவேன்," எனச் சிந்தித்து அத்தடாகத்தின் மற்றக்கரையில் ஓரிடத்திலிருந்து தவம் முயன்றான். அங்ஙனமாக, காளி தேவி முந்திய வணிகன்பால் வந்து அவனுக்கு வேண்டிய வரம் யாதென வினவினள். தன் பகைவன் தன்மீதுகொண்ட அழுக்காறு காரணமாகத் தவஞ்செய்தலை ஒருவாறுணர்ந்த அவ்வணிகன், "அம்மே, என்னிரு கண்களில் ஒன்று குருடாதல் வேண்டும்" என்றான். காளி தேவி புன்முறுவல்பூத்து அங்ஙனம் அவனுக்குதவி மற்றவனிடஞ் சென்று, "உனக்கு யாது வரம் வேண்டும் இயம்புதி" என்றாள். அவன், "அம்மே! என் மாற்றான் பெற்ற வரத்தைக்காட்டிலும் இருமடங்கு வரம் எனக்குத் தரல் வேண்டும்" என்றிரந்தான்.

அதற்குத் தேவி, "அவன், தன்னொருகண் கெடல் வேண்டுமென்று கேட்டான், ஈந்தேன். நீ அவனுக்கு உதவிய வரத்தைப்போல் இருமடங்கு வேண்டி நின்றாய், ஆதலின் உன்னிரு கண்களும் கெடக்கடவை" எனக் கூறி மறைந்தனள். அவ்வணிகன் குருடனாகி, "அந்தோ! பொறாமையினால் மாற்றானைக் கெடுக்கநினைந்து ஈற்றில் யானே பெரிதுங் கெட்டேன், எனக்கிது தகும்!" எனக்கூறிப் பச்சாத்தாபமுற்று வருந்தினன்.

ஆதலால் உலகத்திலுள்ள மானிடப்பிறவியெடுத்த ஆறறிவுயிராம் மக்கள் யாபேரும், தங்கள் தங்கள் மனத்தைப் பொறாமைநெறியின்கட் செல்லவிடாது அறிவாற் றடுத்தல் வேண்டும்; அங்ஙனந் தடுக்காதோர் நரகத்தையடைவர். இதுபற்றியன்றோ தெய்வப்புலமைச் செந்நாப்போதாரும்,

"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்" என்று கூறினர்.

நா. சி. சதாசிவம் பிள்ளை; வேலணை.

---

## ஆனந்தபோதினியின் பெருமை.

### (கும்மி.)

(1) ஆனந்த மீவது போதினியே—நல்
அறிவுசேர் ஆனந்த போதினியே
ஞானந் தனையுமே நல்குவித்து—நம்மை
நற்கதி சேர்ப்பது போதினியே.

(2) இருளை ஒழிப்பது போதினியே—உல
கெங்கும் நிறைந்தது போதினியே
அருளைத் தருவது போதினியே—நம
தல்லலைத் தீர்ப்பது போதினியே.

(3) பெருமையுடைய அறிஞரைக் கொண்டது
பேர்பெற்று வாழ்கின்ற போதினியே
இருபதி னாயிரஞ் சந்தா தாரர்கள்
இன்பாகக் கொண்டது போதினியே.

(4) பதின்மூன்று வருடம தாகவே போதினி
பாரில் உலாவி வருவதனால்
இதன் பெருமை தானுக விளங்கு
மிதைச் சொல்ல வேண்டுமோ நேசர்களே.

(5) கண்ணைக் கவரும் படங்களுமே—இதில்
காணத் தகுந்த வியாசங்களும்
எண்ணி லடங்காம லேவெளி யாகும்
இதற்கிணை வேறுண்டோ நேசர்களே.

(6) மாதம்மாதம்வெளி யாவது மிக்க
மகிமை வியாசங்கள் கொண்டதுவே
காதலன் காதலி யாவருக்கும் நற்
கருத்துக் கிசைந்தது போதினியே.

(7) நாட்டி லுயர்ந்தது போதினியே—மாதம்
நாற்பத் தெட்டுப்பக்கம் கொண்டதுவே
தாட்டீக மாகப் பஞ்சாங்கம் முதல்யாவும்
தன்னிடங் கொண்டது போதினியே.

(8) தேசாபி மானிகள் சரிதத்தை—அன்பர்
தெரியக் காட்டிடும் போதினியே
பாசங்கள் நீங்கிடும் வேதாந்தம் கொண்டது
பண்பான ஆனந்த போதினியே.

(9) எங்குமே பேர்பெற் றிதுநிலவ இதற்
கின்னும் சந்தாதாரர்கள் சேர்ந்திடவே
மங்கையைப் பாகத்தில் வைத்த சிவனடி
வணங்கி யேநிதம் போற்றுவமே.

(10) ஆனந்த போதினி என்னும்மிது—என்றும்
அவனி யிற்றழைத் தோங்கிடவே
ஞானந் தந்திடும் நம்பனும் சிவனை
நாளும் துதித்துநாம் போற்றுவமே.

ஆனந்த போதினியே ஆனந்த அமுதளித்தா னந்த மாக்கும்
ஆனந்த போதினியே அறிவுதனை அளித்துநமை அறிவோராக்கும்
ஆனந்த போதினியே வபவநக்க மளிக்குமந்தி வண்ண ணாகும்
ஆனந்த போதினியை அன்புடனே வாசித்தா னந்திப் பீரே.

M. இராமகிருஷ்ண ஆச்சாரி, ஸ்கூல் டீச்சர் & மானேஜர்,
மேட்டுப்பாளையம்,

# தமிழும் தமிழ்க் கல்வியும்.

'தமிழ்' என்பதற்கு, 'இனிமை' என்பது பொருள். இப்பொருள் தோன்றவே புலவர் திலகரான கம்பநாடரும் தமது இராமாயணத்தில், 'தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே' என்று கூறி யிருக்கின்றனர். இவ்வினிய தமிழ் முற்காலத்தில், அரிய தவத்தினையுடைய அகத்தியமா முனிவரால் தந்தருளப்பட்டு, பாண்டியநாட்டரசர் பாதுகாவலினும், வண்மையினும் செழித்தோங்கிய சங்கங்கள் மூன்றினு மிருந்த மகாமதியாளர்களான புலவர்களால் ஆராயப்பட்ட இயல், இசை, நாடகமென்னும் மூன்று பகுதிகளை யுடையதாய் விளங்குவது. இவரேயன்றி ஏனைய தமிழ் நாட்டரசரும், புலவரும் ஒத்த அன்பினராய் விரும்பி ஆராய்ந்துணர்ந்த மேன்மை யுடையது.

சின்னாள் பல்பிணிச் சிற்றறிவினோராகிய மக்கட்கு உறுதியான நன்மைகளைத் தரும் மெய்ப்பொருள் நிரம்பப்பெய்து, எண்ணிறந்த சிறப்பினவாக மதிநலம் பெற்ற முன்னோர் அமைத்துவைத்த ஞான முதலான பலவகை நூற்களை யுடையது. "குணகடல் குமரி குடகம் வேங்கடம்" என்னும் நான் கெல்லையினுள்ளே வழங்கப்படும் உரிமை பெற்றது.

இத்தகுதியுடைய தமிழ்க்கல்வி இக்காலத்தில் கற்கக் கடமைபூண்ட நமது நாட்டோர் பலராலும் கைவிடப்பட்டிருப்பது யாவரு மறிந்ததே. "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங், கண்ணென்ப வாழு முயிர்க்கு" என்று மூதறிவுடையோர் மொழிந்தவண்ணம், கண்கள் உடலின் உறுப்புக்கள் எவற்றினு மேலாய்ச் சிறந்து,ஒளிதந்து உலகின் பொருள்களைத் தோற்றுவித்துச் செய்யுந்தொழில் அனைத்தினுக்கும் உதவியாய் நெறிகாட்டி விளக்குவதுபோலக் கல்வியும் உலகின் இயற்கை நிலையையும், நம் நிலைமையையும், நமக் கவ்விரண்டினோடு முண்டாகிய சம்பந்தத்தையும் காட்டி, நன்மை தீமைகளை யுணர்வித்து, அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இவற்றை யடைவதற்குரிய ஞான நல்வழிகாட்டி, இம்மை மறுமைக்கு இன்றியமையா உடன்றுணையாய், அழியாப் பெரும்பொருளாய், விலை மதிக்கப்படாத அணிகலனாய் இருப்பதன்றோ?

இக்கல்வியில்லாது செல்வப்பொருளிருந்தால் நாம் நன்மையும் சிறப்பும் அடையமாட்டோமோ வெனின், அடையோம். எவ்வாறெனில், ஒருவர் உடலின் உறுப்புக்கள் யாவும் அமையப்பெற்று, கண்ணிரண்டுமட்டும் இல்லாவிடில் அவ்வுறுப்புக்களால் செய்யும் இயற்கையான வினையும், அடையும் நலமும் சிறப்புறாததுபோலக் கல்வியின்றிச் செல்வத்தாலுண்டாம் காரியங்கள் சிறப்படையமாட்டா. ஆகையால் கண்போன்றதான கல்வியே மற்றவைகளைவிட முதன்மையாகப்பெற யாவரும் முயலவேண்டிய மேன்மையுடையதாக விளங்குகின்றது. கல்விப்பொருளை நன்காராய்ந்து பெற்றவர்களுக்குச் செல்வப்பொருள் கிடைக்காவிடினுங் குறைவின்று. அவர்களுக்கு எக்காலும் நன்மையேயாம். கல்லாதவர்களுக்கு அளவற்ற செல்வப்பொருளிருந்தாலும் நலம்போலத்தோன்றிக் கெடுதியையே விளைவிக்கும். இதை,

"நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு"

என்னும் நீதி வாக்கியத்தா லுணரலாம்.

இவ்வாறு தொன்மையும், இனிமையும், மேன்மையும் பொருந்தி நமக்கு நன்மையும், அறிவும், சிறப்பும், உறுதியுந்தரும்—நாம் பேசும்—சுயபாஷை யாகிய தமிழின் கல்வியறிவை யடைய முயலாதிருப்பது நமது குற்றமும் அறியாமையுமேயாம். ஆகையால், சுயபாஷையான தமிழை நாம் கற்றும், கல்லாதவரைக் கற்கச்செய்தும் வரவேண்டும். செல்வப்பொருள் உள்ளோர் கற்போருக் குதவியாய்க் கல்விப் பெருக்கத்துக்குத் தம்மாலியன்ற சாதன மளித்து, ஒரு மனதுடன் உதவிசெய்துவரின், நாம் நம் முன்னோரைப்போல் சுகஜீவனத்தையும், நீண்ட ஆயுளையும், கல்விப்பேற்றையும், நல்லோர் சேர்க்கையையும், நிலைபெற்ற ஞானத்தையும், அளவற்ற செல்வத்தையும், குறைவற்ற புகழையும், இகத்திற்பெற்றுப் பரத்தில் நித்தியானந்தனாய் விளங் குங் கடவுள் சந்நிதியடைந்து, அவன் கருணைக்குரிமையுள்ளவராய் நிலை பெற்ற வாழ்வையு மடையப் பெறுவோம்.

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே."

சரஸ்வதி சபைத்தலைவர், டர்பன், தென்ஆப்ரிக்கா.

## சுகபானம்.

அன்பார்ந்த சோதர சோதரிகாள்!

நலம்பல செறிந்த நந்தேயத்தில் தற்போது நவீன நாகரிகம் என்னும் பெயர்கொண்ட குரங்கு புகுந்து தலைகால் தெரியாமல் அட்டகாசம் செய்து கொண்டிருப்பது யாவரும் அறிந்த விஷயமன்றோ? அந் நவீன நாகரிகக் குரங்கின் செய்கைகள் முற்றும் விரிக்கிற் பெருகுமாதலின் அதை விடுத்து மேற்கூறிய சுகபானம் என்பதை மாத்திரம் உரைப்பதே நலமெனத்தோன்று கிறது. நம்மவரில் அநேகர் சாதாரணமாய்க் காப்பிப் பானத்தையே அதிகமும் கொண்டாடி வருகின்றனர். இந்தக் காப்பியைச் சாப்பிடுவதால் பற்பல கெடுதிகள் சம்பவிப்பதை நேயர்கள் பிரத்யக்ஷமாகக் கண்டிருந்தும் காப்பியை நிறுத்தக்கூட வில்லையேயென்று பெரிதும் விசனிக்கின்றனர். ஆதலால் காப்பிப் பானத்தை மறக்கக்கூடிய சுகபானம் ஒன்று கூறுகிறோம். இதில் அதிக செலவுமில்லை; வேலையும் அதிகமில்லை; உருசியோ? இந்தப் பானத் தை ஒருதடவை சாப்பிட்டவர்கள் மறுமுறை காப்பியை விரும்பமாட்டார்க ளென்றே திண்ணமாய்க் கூறலாம். அதாவது: சுத்தமான சிவப்பு நிறமுள்ள கேழ்வரகைக் கொணர்ந்து ஜலத்திலிட்டுக் கழுவியெடுத்து வெய்யிலில் சற்று உலரவைத்து எடுத்துக் காப்பிக்கொட்டை வறுப்பதுபோல் நெய்யிட்டு வறுத் துப் பொடித்து ஒரு டப்பியில் வைத்துக்கொண்டு காப்பிப் பொடி உபயோ கிப்பதைப்போல் உபயோகிக்கலாம். வடிகட்ட வேண்டியதில்லை. இதைப் பருகுவதில் நிகரற்ற உருசியும் வாசனையும் ஏற்படுவதன்றி தேகாரோக்கியமும் இரத்தவிருத்தியும் உண்டாகின்றனவென்று கைதேர்ந்த வைத்தியர் பலருங் கூறுதற்கிணங்க அநுபவத்திலும் யாம் கண்டதோடு நம் நேயரிற் சிலரும் ஷை பானத்தைப் பருகி ஆனந்த மெய்துகின்றனர். ஆதலால் சகோதரர் யாவரும் இந்தச் சுகபானத்தை அருந்திச் சுக முறுவார்களென்பது எமது பூர்ண அபிப்பிராயம்:

N. S. கோபாலகிருஷ்ண பிள்ளை, ஒடையகுளம்.




## காயத்திரி.

(374-ம் பக்கத் தொடர்ச்சி.)

காயத்திரி ஜெபத்தில் சூரிய நமஸ்காரம் பிரதமமானது. காயத்திரி ஜெபத்தில் அதாவது தனக்கிஷ்டமாகிய ஒன்றை நீடித்து மனதில் சங்கல்பித்துப் பழகும் சாதனத்தில், சூரியன் உதயமானதும் எழுந்திருந்து அவனுடைய பிரதம ஒளி நம் சரீரம் பூராவும் வீசும்படி, நேத்திரத்திற்குப் பிரகாசத்தைக் கொடுத்து நேத்திரத்தில உள்ள சகல தோஷத்தையும் சூரிய பிரகாச அக்கினியின் பிரவேசத்தால் நிவர்த்திக்குமாறு ஆதித்தனை வணங்கல் வேண்டும். அதாவது சற்றுநேரம் அவனுடைய வியாபக ஒளியை நம்முடைய சிறிய ஒளியால் பார்த்தல்வேண்டும். அப்படிப் பார்ப்பதால், அப் பெரிய ஒளியின் சக்தியானது நமது சிறிய ஒளிக்கு நன்மையைக் கொடுக்கும். அன்றியும் அவனை நமஸ்கரிப்பதால் அக்குள் முதலான இடங்களில் காணும் விஷங்களை சூரியன் ரஸ்மியால் மாற்றும். ஆனதால் சரீரத்தின் பேரில் ஆடையின்றி இரண்டு கைகளையும் சிரசுக்குமேல் தூக்கிச் சில நிமிஷங்கள் சூரியனை நமஸ்கரித்தல்வேண்டும். இதன்படியே நமது சரீர அவயவங்களின் ஒவ்வொருபாகத்திலும் சூரிய உஷ்ணம் தாக்கும்படியான விதத்தில் நமஸ்கரித்தல்வேண்டும். இதன்படியே சூரிய அஸ்தமன காலத்திலும் நமஸ்கரித்தல்வேண்டும். சூரிய நமஸ்காரம் செய்வதற்கு மாத்திரம் சந்தியாவந்தனமென்றும், தனக்கிஷ்டமான பிராப்தியை அடைவதற்குத் தனக்கிஷ்ட வஸ்துவை நீடித்து இடைவிடாது மனதில் நினைப்பதற்குக் காயத்திரி என்றும் பெயர்கள் சொல்லப்படும். இதுவரையில் சொல்லிவந்த விதிகளின்படி நடவாதவர்களுக்கே வியாதிகள் உண்டாகும். ஆதலின் அத்தகையார்களின்பொருட்டு வியாதிகளையும், வியாதியின் லக்ஷணங்களையும், அவற்றின் பெயர்களையும், அவற்றிற்குகந்த சிகிச்சைகளையும் கூடியவரையில் இனி எழுதுவோம.

(தொடரும்.) டாக்டர்-மே. மாசிலாமணி முதலியார்.

---

## சன்மார்க்க சற்போத ஞானக்கும்மி.

### காப்பு.

1. அன்பின்வழிநின் ருசை யருகவிட்
டார்வமுடன் மாந்த ரீசன்பதமெய்த
இன்பநதரு ஞானக் கும்மியை யான்பாட
எந்தை பராபரன் காப்பாமே.

2. சித்தந்திருத்திச் சிவத்தினை நாடிடிற்
சேருந்திருவருள் காரணமாய் நாமு
மித்தரைமீதினி லெத்தனை யோதீமை
யின்றி யிருப்போமே ஞானப்பெண்ணே.

3. ஓயாத அன்புட னீசனைநாந்தொழ
லுண்மையாம் பாதைமற் றுள்ளமெல்லாம்.
மாயையிலெங்களை விட்டு வருத்தி
மயங்கிடச் செய்யுமே ஞானப்பெண்ணே.

4. எம்பெருமான்றன்னை எப்பொழுதும் நாங்க
ளேத்தித்தொழுதிடி லெப்பெரும் நன்மையும்
நம்பியிருக்கலாம் நாடாதி ருந்திடில்
நாமுய்த லுண்டோசொல் ஞானப்பெண்ணே.

5. எல்லா உயிருக்கு மேற்றபதவியை
எப்போதுந் தப்பாம லீந்திடுமீசனைச்
சொல்லுமனங்காயம் மூன்றாலுஞ் சோர்வின்றித்
தோத்திரஞ் செய்வோமே ஞானப்பெண்ணே.

6. சிந்தைகலங்கிச் சிதைவுற்று வாடிடும்
சேய்களாமெங்களைச் சீர்மையுறச் செய்ய
எந்தை பிரானைப்போல் ஏற்றகதியினை
எங்குநாம் காண்பது ஞானப்பெண்ணே.

7. உற்றாரயலாரோ ரோரமை நாடல்
உண்மையாயெங்களி லுள்ளஅன் பாலல்ல
மற்றும் பல்லூதியம் பற்றவேயாதலால்
வாடி மயங்காதே ஞானப்பெண்ணே.

8. சிவாய நமவென்று சிந்தித்திருந்திடிற்
சேராதோர் கஷ்டமென் றேதெரிந்தோ
ரபாயத்தை நீக்கற் கருமருந்தீதென்
றறைந்தன ரல்லவோ ஞானப்பெண்ணே.

9. பொய்யாமுலகைப் பொருளென நாமெண்ணிப்
பொன்போலும் போதனையெல்லாம் புறத்தில்விட்
டுய்யும் வழியின்றி யோடித்திரிவதி
லூதிய மென்னதான் ஞானப்பெண்ணே.

10. பஞ்சாட்சரத்தைப் பயபக்தி யோடுநாம்
பன்முறை மேலோர் பகர்ந்த முறைப்படி
நெஞ்சார வெப்போதும் பாராயணஞ் செய்தல்
நேர்வழி யென்றறி ஞானப்பெண்ணே.

11. நல்ல வழியினை ஞானிகளெங்கட்கு
நன்மை யுறும்படி நாட்டியிருக்கவும்
பொல்லாத பாதையிற் புந்திசெலுத்திடல்
புத்தியோ சொல்லடி ஞானப்பெண்ணே.

12. பற்றெல்லா மற்றவர் பாவங்களொன்றிலும்
பற்றாதிருப்பதைப் பாரோரனைவரும்
முற்றாயறிந்தும்பின் மூன்றையும் பற்றுதல்
மூடமதல்லவோ ஞானப்பெண்ணே.

13. அன்பு நிறைந்த அருணகிரிநாதர்
ஆரும் புகழ்ந்திடப் பட்டினத்தாருடன்
இன்ப நிறைதாயு மானவர் கீதங்கள்
எப்போதும் பாடுவோம் ஞானப்பெண்ணே.

14. மெய்யாந் துறவினை மேவியே நிற்பவர்
மேலாம்பதவியை மேன்மையுடன் பெறல்
பொய்யல்லவென்பதைப் போதித்துப் போந்தனர்
போதனை யாளரும் ஞானப்பெண்ணே.

15. தெய்வபயத்தோடு தேசாபிமானமும்
சேர்ந்திடி லெங்கட்குச் சேருமே சந்தோஷம்
உய்வதை யெண்ணு வுலுத்தர்களென்று
மூலவது நிச்சயம் ஞானப்பெண்ணே.

16. சைவசமயத்தைச் சாருதற்கேவுவோர்
தாரணி மீதினிற் றம்மை யொறுத்தலால்
மெய்வரம் பெற்றுப்பின் மேலாகும் முத்தியை
மேவினரல்லவோ ஞானப்பெண்ணே.

17. இன்றைக்கிருந்தாரை இவ்வுலகில் நாங்கள்
இன்பமுறநாளை யிங்கேதானில்லாது
பொன்றுதல்கண்டும்பின் பொய்யாமுலகினைப்
போற்றுதல் புத்தியோ ஞானப்பெண்ணே.

18. சாதிபணத்திலே தம்மிலும் மிக்கார்கள்
தாரணிமீதிலே யாருந்தானில்லையென்
றோதித்திரிபவ ருய்யும் வழியினை
ஓராரே பாவிகள் ஞானப்பெண்ணே.

19. உற்றாரும் மற்றாரும் சந்தையிற் கூட்டமென்
றான்றியுணருதற் கொவ்வொரு நாளுமே
கற்றறிவுற்றவ ரோடுமற் றுள்ளவர்
காற்றாய்ப்பறக்கிறார் ஞானப்பெண்ணே.

20. என்னவித நன்மை யெய்தினும் பாரினில்
ஏற்றதோர் மாதிரி யீசன்தன் பாதத்தை
முன்னை வினையற்று முற்றாகப் பற்றிடும்
மோட்சத்துக் கொப்பாமோ ஞானப்பெண்ணே.

21. பொய்கள வாதியாம் புன்னெறி பற்றிடும்
புல்லர் பலர்கெட்டுப் போவதைக் கண்டும்பின்
மெய்ந்நெறி விட்டுநாம் மேதினி மீதினில்
மேட்டிமை செய்வதேன் ஞானப்பெண்ணே.

22. புண்ணிய பாவத்தைப் பூரணமாக வெப்
போது மறிதற்குப் பூவினிலே யெங்க
ளெண்ணுக் கடங்காத சைவ சமயத்துக்
கேது மிணையுண்டோ ஞானப்பெண்ணே.

(தொடரும்.) கா. சின்னப்பா, அளவெட்டி, யாழ்ப்பாணம்.

# அறிஞரின் அமுதமொழிகள்.

(472-ம் பக்கத் தொடர்ச்சி.)

19. I awoke one morning and found myself famous.
*Byron.*

குடிகளுக்கு அனுகூலம் ஏற்படும்படி உழைப்பவரை அக்குடிகள் மேன்மையாகப் பாராட்டுவார்கள். (பைரன்.)

20. He builded better than he knew. *Emerson.*

அறிவுடையோர் எந்தக் காரியத்தையும் மேலாகச் செய்வர். (எமர்சன்.)

21. Go forth, under the open sky, and list
To nature's teachings. *Bryant.*

ஆண்டவன் செய்துள்ள ஏற்பாடுகளைப்பற்றித் தீரயோசித்து, அந்த ஏற்பாடுகளின்படி வாழ்க்கையைச் செலுத்துங்கள். (பிரையன்ட்.)

22. Truth crushed to earth shall rise again. *Bryant.*

ஜனங்களுக்கு அனுகூலம் ஏற்படும்படி உழைப்பவரைப் பிறர் எவ்வளவு இம்சித்தபோதிலும் அவர்கள் கிஞ்சித்தேனும் மனத்தளர்ச்சி யடையாமல் முன்போலவே உழைப்பர். (பிரையன்ட்.)

23. The melancholy days are come
The saddest of the year. *Bryant.*

அநீதம் செய்பவர்கள் பிற்காலத்தில் வருந்துவர். (பிரையன்ட்.)

24. My native land—good night! *Byron.*

ஒவ்வொருவருக்கும், தம்முடைய தாய்நாடே சிறந்த நாடாகும். (பைரன்.)

25. It is a goodly sight to see
What Heaven hath done for this delicious land.
*Byron.*

இயற்கை அழகே மேலான அழகாகும். (பைரன்.)

26. War, war is still the cry, 'war even to the knife'—
*Byron.*

சுயநலங்கருதும் மானிடர் உலகில் இருக்கும் வரையில் யுத்தம் நிகழ்ந்துகொண்டுதானிருக்கும். (பைரன்.)

27. A mother is a mother still,
The holiest thing alive *Coleridge.*

எல்லாரையும்விட தாயாரே மேம்பட்டவர். (கோலரிஜ்.)

(தொடரும்) A. P. இராமன், B. A.






## கிருஷ்ணாவின் அல்லது துப்பறியும் சீடன்.

(476-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவன் கூறிய மாதிரியால் அவன் வார்த்தைகள் சத்தியமானவையே யென்பது ஆனந்தசிங் மனதிற்பட்டது. அதைப்பற்றி அவனுக்குச் சந்தேகமேயில்லை. ஆனால் அக்கன்னிகையின் சில நடவடிக்கைகள் இராஜவேலுக்குத் தெரியும் என்பது அவன் புத்தியிற் பட்டதால் அதைப்பற்றி யறியவேண்டுமென்பதேயவன் கவலை.

இவனுக்கும் அவளுக்கும் ஏதாவது கடிதப் போக்கு வரத்து இருந்தால் அதை இவன் கிழித்தெறிந்திராவிட்டால் அது இப்போதிவன் ஜேபியி லிருக்கவேண்டும். அதை யெப்படி யறிவது என்று யோசித்தான். உடனே சாதாரணமான யுக்தி ஒன்று தோன்றியது.

அவன் உடனே எழுந்து போய் மிக்க கலவரமும் ஆவலுமுடையவன் போல் இராஜவேல் மேஜையின் எதிரில் நின்று மேஜைமேல் ஒரு கையை வைத்துக்கொண்டு ஆத்திரத்தோடு அவனை நோக்கி,

“இதோபார் இராஜவேல்! நான் வயது முதிர்ந்த கிழவன். நீ வாலிபன். மேலும் நான் உன்னிலும் உலக அனுபவமுடையவன். நீ மனோன்மணியை நேசிக்கிறாயென்பதும், அவள் உன்னை நேசிக்கிறாளென்பதும் எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் இந்த விஷயத்தில் வெளியில் தோன்றுவதை விட ஏதோ ஒரு மர்மமிருக்கிறது. பெரிய மர்மமிருக்கிறது. அது......” என்று கூறிக்கொண்டே கை நடுக்கத்தால் தவறி விட்டவன்போல் மேஜை மேலிருந்த மசிப்புட்டியை யுருட்டி இராஜவேலின் சட்டையில் அதிக மசி படும்படி செய்து விட்டு, “அடடா! நானென்ன மூடன். பேச்சு அவசரத்தில் இப்படிச் செய்துவிட்டேனே...” என்று பரிதபித்துக் கொண்டே மசியை யொத்தும் கடிதத்தால் அவன் சட்டைமேல் விழுந்த மசியை யொத்தி எடுத்தான். எடுத்துவிட்டு, “உன் கையில் பட்ட மசியை அது உலருமுன் கழுவு, இதோ நான் உன் மேற் சட்டையைக் கழற்றி விடுகிறேன்” என்று துரிதமாய்ச் சட்டையைக் கழற்றிக்கொள்ள, கபடமற்ற இராஜவேல் கைகளைக் கழுவச் சற்று எட்டவிருந்த தண்ணீர்ப்பாத்திரத்திற்குச் சென்று தன் கரங்களைச் சுத்தி செய்யத் தொடங்கினான்.

ஆனந்தசிங் அவன் பின்னால் நின்று தன்னாலவனுக்குண்டான வீண் வேலைக்காக மனவருத்தப் படுபவன்போல் பேசிக்கொண்டே தன் கையில் இருந்த அவன் சட்டைப்பைகளைச் சோதித்தான்.

இராஜவேல் பரவாயில்லையென்று சமாதானம் கூறிக்கொண்டே யிருக்கையில் ஆனந்தசிங் மிக்க விசனப்படுபவன் போல் கூறிக்கொண்டே ஜேபியில் அகப்பட்ட ஒரு கடிதத்தை யெடுத்து வாசித்தான். அது ஸ்திரீகள் கையெழுத்துப்போலிருந்தது. அதில், “என் அன்பான காதலனே! ஜாக்கிரதையாயிரு; துப்பறிபவர்கள் என்மேல் மோகுலாயிருக்கிறார்கள்; பணம் என்னிடமிருக்கிறது. சரியாய் 10 மணிக்கு 8-வது வீதியின் தெற்குக் கோடியில் அவசியம் என்னைச் சந்தி” என்றெழுதியிருந்தது.

ஆனந்தஸிங் துரிதமாய்க் கடிதத்தை வாசித்து மறுபடி அதை மடித்துச் சட்டையின் ஜேபில் வைத்துவிட்டு, இராஜவேலேப் பல கேள்விகள் கேட்டு விட்டுக் கடைசியில், "சரி, இனி நான் போய்வருகிறேன். நான் மனோன்மணியை யெப்படியும் கண்டுபிடித்து விட்டு உங்கள் இருவர்க்கும் கலியாணம் நடக்கும்போது நானே முதல் விருந்தாளியா யிருப்பேன் என்பது உண்மை" யென்று கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

இப்போது ஆனந்தசிங் துரிதமாய்ச் செய்யவேண்டிய வேலேகள் அதிகமாயிருக்கின்றன. ஆயினும் அவன் என்னதான் பலசாலியாயினும் ஆகாரமின்றி யென்ன செய்யமுடியும்! ஆகையால் அவன் உடனே நேராய் வீட்டிற்குச் சென்றான்.

கிருஷ்ணசிங் தன் மைந்தனைக் கண்டதே ஆவலுடன், "குழந்தாய்! என்ன சமாசாரம்? அதிஷ்டம் எப்படியிருக்கிறது?" என்றான்.

ஆனந்தசிங் "தந்தையே! நல்ல அதிஷ்டமே. நான் இங்கிருந்து புறப்பட்டுப் போகும்போது இப்படி நேரிடுமென்று நினைக்கவேயில்லை. தந்தை! எனக்குப் பசி யதிகம். கூடுமானல் இரண்டு மூன்றுபேர்களுக்குப் போதுமான ஆகாரம் கொடும். அதற்குள் நான் ஒரு பெண் உருவமாய் மாறவேண்டும். பிறகு நடந்த சங்கதிகளைக் கூறுகிறேன்" என்றான்.

கிருஷ்ணசிங் உடனே சென்று ஆகாரம் தயார் செய்தான். அதற்குள் ஆனந்தசிங் ஒரு வெளி நாட்டு மாதுபோல மாறுவேட மணிந்துகொண்டான். தந்தை, அவள் வேடத்தைக் கண்டதே மிக்க வியப்பும் பெருமையு மடைந்து தலையசைத்து, "பேஷ்! நீ மாறு வேடமணிந்து கொள்ள என்னிடமே கற்றுக் கொண்டாயெனினும் என்னைவிட அதிக கெட்டிக்காரனய் விட்டாய். இனி நான் இங்கு சிறைப்பட்டிருந்த காலத்தில் நடந்த சங்கதிகளை விவரமாகக்கூறு. இன்னும் கால்மணியில் ஆகாரம் வட்டிக்கிறேன். அதற்குள் நடந்த சங்கதியைக்கூறு" என்றான்.

ஆனந்தசிங் நடந்த சங்கதியை விவரமாகக் கூறினன். கிருஷ்ணசிங் தன் மைந்தனை நோக்கி, "பேஷ்! நீ மிக்க சாமர்த்தியமாய்ச் சுறுசுறுப்பாய் வேலே செய்திருக்கிறாய்" என்றான்.

போஜனம் முடிந்ததே ஆனந்தஸிங் தன் ஸ்திரீ வேடத்தோடு ஒரு பதார்த்தக் கூடையைக் கையி லெடுத்துக்கொண்டு தன் தந்தையை நோக்கி,

"அய்யா, தாங்கள் எனக்கு ஒரு சிறு உதவி செய்ய வேண்டும்." என்றான்.

தந்தை:—என்ன உதவி?

ஆனந்:—தாங்கள் உடனே புறப்பட்டு நகர உல்லாச வனம் வரையில் உலவிக்கொண்டு போய்ப் பிறகு திரும்பிவந்து வீட்டிலேயே யிருக்கவேண்டும்.

இதைக்கேட்ட கிருஷ்ணஸிங் மிக்க வியப்படைந்து காரணம் தெரியாமல் விழித்தான்.

ஆனந்:—"ஏனெனில், நான் அந்த வீட்டைவிட்டுப் புறப்பட்டது முதல் என் பின்னல் தொடர்ந்துவந்த மனிதன் பிறகும் என்னைத் தொடர்ந்து வர வெளியில் காத்துக்கொண் டிருக்கிறான். அவனைக் கொஞ்சநேரம் அப்புறப்படுத்த வேண்டும்" என்றான்.

பழம் பெருச்சாளியாகிய கிருஷ்ணஸிங் நகைத்துக்கொண்டே, "நான் அவனுக்கு நல்ல ஆட்டங் காட்டுகிறேன். அதற்காக நீ யஞ்ச வேண்டாம்" என்றான். (தொடரும்) ஆரணி. குப்புசாமி முதலியார்.




நாடகத்தில் வசூல் அதிகமாவதற்கு நூதனமாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் ஒருவகைத் தந்திரம் :—சிலர், நாடகத்தில் பேர்போன ஆக்டர்களைத் தனித்தனியாகப் பல விடங்களிலிருந்து பொறுக்கித்திரட்டி ஸ்பெஷல் நாடகங்கள் வைத்துவந்ததில் அதிக வசூலாகிக் கொண்டுவந்தது இப்போது குறைந்திருக்கிறது. ஆதலால் இனி, ஒரு பேர்போன கம்பெனியிலுள்ள மிருதங்கத்தையும், மற்றொரு கம்பெனியிலுள்ள ஆர்மோனியத்தையும், வேறொரு கம்பெனியிலுள்ள கைத்தாளத்தையும், பின்னொரு கம்பெனியிலுள்ள டிரம்களையும் ஒன்றுசேர்த்து ஸ்பெஷல் நாடகங்கள் நடத்தினால் அதிக வசூலாகுமென்று ஒரு நாடகதந்திர நிபுணர் கண்டுபிடித்திருக்கிறாராம்.

சேம்பியன்.

*** ***

ஒன்றரை மணங்கு ஒட்டறை கிடைக்குமா? வென்று ஒருவன் ஒரு மளிகைக்கடையில் கேட்டானாம். அவன் ஜவுளிக்கடைக்குப் போகச்சொன்னானாம். ஜவுளிக்கடைக்காரன், மார்வாடி கடைக்குப் போகச் சொன்னானாம். மார்வாடி கடைக்காரன் தனக்கு எதிரிலுள்ள காபி ஓட்டலைக் காண்பித்தானாம். காப்பி ஓட்டல்காரன், "எதற்காக ஒட்டறை? கருப்பு ஒட்டறை வேண்டுமா? வெள்ளை ஒட்டறை வேண்டுமா?" வென வினவினானாம். ஒட்டறை வாங்கச்சென்ற மனிதன், "ஐயா! இரண்டு வருடக் கெடுவுக்கு நான் ஒரு வீட்டை வாடகைக்கு வாங்கிக் குடியிருந்தேன். கெடுமுடிந்து வீட்டைக் காலிசெய்யப் போகும்பொழுது வீட்டுக்காரன் வீட்டைப் பார்த்துவிட்டு நான் குடி இருக்க வந்தபொழுது வீடு எப்படி இருந்ததோ அப்படியே இப்பொழுதும் வீடு இருக்கவேண்டும் என்று கூறிப்போனான். அதற்காகத்தான் வந்தேன்." என்றானாம்.

*** ***

கடன் கொடுத்த ஒருவன், கடன் வாங்கின ஒருவனிடம் நெடுநாள் அலைந்து, அலைந்து சலித்துப்போய், கடைசியாக ஒருமுறையும் போய்க் கடனைக் கேட்டானாம். அதற்குக் கடன்காரன், "ஆகட்டும் தருகிறேன்" என்றானாம். அதற்குக் கடன் கொடுத்தவன், "ஐயா! என்னை வீணில் அலையவிட வேண்டாம்; முடிவாக ஒரு நாளைச் சொல்லுங்கள்; அந்த நாளில் வருகிறேன்; பணத்தைக் கண்டிப்பாய்க் கொடுத்துவிடுங்கள்" என்று தயவாய்க் கேட்டானாம். அதற்குக் கடன் வாங்கினவன், "அப்படியானால், அடுத்த மாதம் 29உ வாருங்கள். நீங்கள் வரவேண்டிய நாளைக் குறிப்பிட்டுச் சொல்லுகிறேன்." என்றானாம். கி. ஆ. பெ. விசுவநாதபிள்ளை, திருச்சிராப்பள்ளி.

*** *** ***

ஓர் உபாத்தியாயர் ஒரு வகுப்பு மாணாக்கர்களைக் கூப்பிட்டுத் தனித்தனியே ஒவ்வொருவரையும் மனக்கணக்குப் பரீக்ஷைசெய்து போகச்சொல்லி ஈறாக ஒருவனைக் கூப்பிட்டு நீ உங்கள் வீட்டிற்குச் சாமான் வாங்கக் கடைக்குப் போய் 4 அணாவுக்கு ரவை, 2 அணாவுக்கு நல்லெண்ணெய், ஆறு பைசாவுக்கு கடுகு, உள்ளி, உப்பு இவைகள் வாங்கிக்கொண்டு வரும்போது சந்தைக்குள் போய் மூன்று பைசாவுக்குக் கருவேப்பிலையும் பச்சைமிளகாயும் வாங்கினாயானால் என்ன ஆகும் என்றாராம்.

மாணாக்கன்:—கொஞ்சம் தண்ணீர்விட்டுக் காய்ச்சிக் கிளறினால் இட்டடட்டப் பத்துக்கப் உப்புமாவாகும் சார் என்றானாம்.

A. R. M. உடையார் சேட்டியார்.

# மதிப்புரை.

**மதுரகான பக்திரஸ கீர்த்தனங்கள் :—**

[இது முருகக்கடவுள் துதிக் கீர்த்தனங்கள் பல அடங்கிய நூல்; திரிசிரபுரம், 'மங்களதாஸ்' என்பவரால் இயற்றப்பட்டது. திருச்சி புத்தக வியாபாரம் T. R சாமியாபிள்ளை அண்டு சன்ஸ் அவர்களால் பிரசுரிக்கப் பெற்றது.] இதிலுள்ள கீர்த்தனங்கள் செம்பாகமாக எவர்க்கும் பொருள் விளங்கும்படி இனிய தமிழில் இயற்றப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கீர்த்தனத்தையும் எவரும் வர்ணமெட்டுத் தெரிந்து தாம்தாமே சுலபமாகப் பாடிக் கொள்ளும்படி ஒவ்வொன்றின் தலைப்பிலும் மாதிரிக்காக வழக்கத்தி லிருக்கும் வர்ண மெட்டுக்கள் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. இக்காலத்தில் இத்தகைய துதி நூல்கள் பெரும்பான்மையோரால் மிகுதியும் பிழைபட்ட தமிழிலேயே இயற்றப்பட்டு வெளிவருகின்றன. ஆனால், இந்நூல் இலக்கணப் பிழை, எழுத்துப் பிழைகள் இன்றி நல்லவிதத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆதலின், இது பல அறிஞரும் பாராட்டத் தக்கது. விலை அணா-5.

***

**சுயமரியாதைப் பஞ்சாங்கம்:—**

இப்பஞ்சாங்கம், திருச்சிராப்பள்ளி, மணிவாசகத் தமிழகத்திலிருந்து நம் பார்வைக் கனுப்பப்பட்டிருக்கிறது. அழகிய அமைப்புள்ளது; வைக்கம் வீரர், திருவாளர் இ. வி. இராமசாமி நாயக்கர் அவர்களின் திருவுருவப் படத்தோடு கூடியது. தமிழிலும், ஆங்கிலத்திலும் மாதங்களும் வாரங்களும் தேதிகளும் அமைக்கப் பெற்றது. தமிழ் விபவஞு சித்திரைமீ முதல் பங்குனிமீ வரையில் தேதி முதலியன காட்டக்கூடியது. ஒவ்வொரு மாதத்தின் இரண்டு பக்கங்களிலும் திதிகளும், நக்ஷத்திரங்களும், விசேஷ தினங்களும் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. கீழ்ப்பக்கத்தில் அமிர்தாதியோகங்களும், இராகு, குளிகை, எமகண்டம் இவற்றின் காலங்களும், வாரசூலையின் திக்கும் காலமும், வாரசூலைப் பரிகாரமும் விளக்கப்பட்டிருக்கின்றன. தலைப் பக்கத்தில் சுயமரியாதையைப் போற்றத்தக்க சில உறுதி மொழிகளும், நயவஞ்சகமாக மனிதரை அடிமைப் படுத்துவோரின் சூழ்ச்சியினின்று நீங்கவேண்டு மென்பதை யுணர்த்தும் சில கட்டுரைகளும் அச்சிடப்பட்டிருக்கின்றன. இது, தமிழர் ஒவ்வொருவரும் பொன்னேபோல் போற்றத்தக்க புதுப்பஞ்சாங்கம்.

***

**ஞான மணி மாலை (பதிற்றுப் பத்து):—**

இப் பெயரிய புத்தகமொன்று வரப் பெற்றோம். [இது, சென்னை, எழும்பூர், எஸ். பி. ஜி. செண்ஜான்ஸ் ஆலயம், திருவாளர். P. இராஜகோபால் உபதேசியார் அவர்களால் இயற்றப்பட்டது. இதன் விலை அணா 4.]

இது, கிறிஸ்து சமய மூல உபதேசங்களாகிய பத்து உபதேசங்களையும், ஒவ்வொன்றுக்கும் பத்துப் பத்துச் செய்யுட்கள் வீதம் நூறு செய்யுட்களால் விளக்குவது. செய்யுட்கள் எவர்க்கும் பொருள் விளங்கக்கூடிய தெளிவான நடையில் அமைந்துள்ளன. இது, கிறிஸ்தவ சகோதர சகோதரிகள் பலர்க்கும் நன்குபயன் படுவதோடு மற்ற சமயத்தவர்க்கும் அப்பத்து உபதேசங்களையும் உணர்ந்துகொள்வதற்கு மிக உபயோகமானது. பொதுவில் இது, தமிழ் மக்கள் எல்லோருமே விரும்பத்தக்கதாகும்.



# வர்த்தமானப்பகுதி

இங்கிலாந்தில் 20 வயதுக்கு மேற்பட்ட 1 கோடி 22½ லட்சம் ஆண் மக்களும், 29 வயதுக்கு மேற்பட்ட 92½ லட்சம் பெண்களும் சட்டசபை அங்கத்தினரை நியமிப்பவர்களாயிருக்கிறார்கள். ஆண்களைப்போல், 20 வயதுக்கு மேற்பட்டு 30 வயதுக்கு உட்பட்டுள்ள பெண்களும் இந்த அங்கத்தினர்களை நியமிக்கும் உரிமை பெறும்படி ஒரு சட்டம் ஏற்படுத்தச் சட்டசபை அங்கத்தினர் கூட்டத்தில் ஷை சட்ட நகல் ஒன்று சமீபத்தில் வாசிக்கப்பட்டது. இந்தச் சட்டம் ஏற்பட்டால், புதிதாக 52½ லட்சம் பெண்கள் சட்டசபை அங்கத்தினர்களை நியமிப்பவர்களாக ஏற்படுவார்கள். சட்டசபை அங்கத்தினர்களை அடுத்த முறை நியமிக்கையில் 2 கோடி 67½ லட்சம் ஜனங்கள் (1 கோடி 22½ லட்சம் ஆண்மக்களும், 1 கோடி 45 லட்சம் பெண்களும்) அவர்களை நியமிப்பார்கள். நியமிப்பவர்களில் ஆண்களைவிடப் பெண்கள் 22½ லட்சம் பேர்கள் அதிகமா யிருக்கிறபடியால், இனிமேல் இங்கிலாந்தில் பெண்கள் விருப்பப்படி ஆட்சி நடைபெற வேண்டியதா யிருக்கிறது.

***

ரஷ்யா தேசத்தில் மன்னர் ஆட்சியை ஒழித்து ஏழை யாட்சியை ஏற்படுத்தி நான்கு ஆண்டுகட்கு முன்னர்க் காலஞ்சென்ற லெனின் என்பவர் சிறந்த அறிவு வாய்ந்தவரா யிருந்தார். அவர் அத்தகைய அறிவு பெற்றிருந்ததற்குரிய காரணங்களைக் கண்டறிவதற்காக அவருடைய மூளையை 31,000 துண்டுகளாகப் பகிர்ந்து, ஒவ்வொரு துண்டையும் ஆராய்ச்சியில் மேம்பட்டவர்கள் பரிசோதித்து வருகிறார்கள்.

சென்ற ஆண்டில் இங்கிலாந்திலும் அதற்கு அடுத்த வேல்ஸ் மாகாணத்திலும் சில தாய்மார்களும் தாதிமார்களும் மது உட்கொண்டதால் ஏற்பட்ட போதையினால் தங்கள் வசத்திலிருந்த ஒரு வயதுக்குட்பட்ட சிசுக்களின்மேல் படுத்துத் தூங்கி 429 சிசுக்களைக் கொன்றிருக்கின்றனர்.

***

நம் நாட்டில் வடக்கேயுள்ள இந்தூர் இராஜ்யத்தின் குடிகள் செலுத்தும் வரிப் பணத்திலிருந்து, சிம்மாசனத்தைவிட்டு விலகிய மன்னர் செலவுக்கு வருடத்தில் 8 லட்சம் ரூபாவும், அவருடைய இரண்டு மனைவிகளில் ஒவ்வொருவருக்கு 2 லட்சம் ரூபாவும் கொடுக்கப்படுகின்றன. இத்துடன் தற்போதைய மன்னருக்கும் பல லட்சக்கணக்கான ரூபா கொடுக்கப்படுகிறது.

***

இங்கிலாந்து தேசத்தில் குடிகள் அடுத்த ஆண்டில் சட்டசபை அங்கத்தினர்களை நியமிப்பர். அதன் பொருட்டுத் தங்கள் கட்சியாரை அச்சபை அங்கத்தினராக நியமித்தால் அவர்கள் குடிகளுக்கு இன்னின்ன அனுகூலங்களைச் செய்வார்களென்பதை அததேசத்திலுள்ள (1) கான்சர்வடிவ் கட்சியார், (2) லிபரல் கட்சியார், (3) தொழிலாளர் கட்சியார் ஆகியவர்கள் தத்தம் கூட்டங்களில் பேசுவதன்மூலமாகவும், துண்டுப் பிரசுரங்கள் மூலமாகவும், பெரிய பிரசுரங்கள் வாயிலாகவும் இப்பொழுதே குடிகளுக்குத் தெரிவிக்க ஆரம்பித்துவிட்டனர். இவ்வாறு செய்வதற்கு ஒவ்வொரு கட்சியாருக்கும் பல லட்சக் கணக்கான ரூபா செலவாகுமாம்; தொழிலாளர் கட்சியாருக்குச் சுமார் 15 லட்சம் ரூபா செலவாகுமாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**விபவ௵ ஆனிமூ—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1337-38—கொல்லமாண்டு 1103—ஹிஜரி 1346-47,**
**இங்கிலீஷ் 1928௵ ஜூன்மூ—ஜூலைமூ**

| ஆனி தேதி | ஜூன் தேதி | வாரம் | திதி | நக்ஷத்திரம் | யோகம் | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | ஏகா24-33 | அஸ்28-33 | அ28-33சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 2 | 15 | வெ | து16-38 | ப✕22-43 | சித்60 | கிருத்திகை, பிரதோஷம் |
| 3 | 16 | சனி | திர8-15<br>சது59-35 | கிரு16-13 | அ16-13சி | மாச சிவராத்திரி, அவமாகம், சுரங்கம் வெட்ட |
| 4 | 17 | ஞா | அ●51-5 | ரோ9-38 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 5 | 18 | திங் | பிர43-10 | மிரு3-20<br>திரு57-30 | அ3-20சி<br>சித்60 | ஆஷாடசுத்தம், அவமாகம் |
| 6 | 19 | செவ் | துதி36-3 | புன52-50 | | கரிநாள் |
| 7 | 20 | புத | திரி30-13 | பூசம்49-30 | சித்60 | சர்வமுகூர்த்தம் |
| 8 | 21 | வியா | சது26-3 | ஆயி47-53 | சி47-53அ | மாசசதுர்த்தி விரதம் |
| 9 | 22 | வெ | பஞ்23-40 | மக48-5 | ம48-5சி | சுபகாரியங்கள் விலக்க |
| 10 | 23 | சனி | சஷ்23-18 | பூரம்50-13 | சி50-13ம | சஷ்டி, குமாரசஷ்டி |
| 11 | 24 | ஞா | சப்24-58 | உத்54-15 | அமி60 | ஆனித் திருமஞ்சனம் |
| 12 | 25 | திங் | அஷ்28-5 | அஸ்59-55 | சி-59-55பி | |
| 13 | 26 | செவ் | நவ32-55 | சித்60-0 | சித்60 | |
| 14 | 27 | புத | தச33-55 | சித்6-50 | சித்60 | |
| 15 | 28 | வியா | ஏகா45-13 | சுவா14-30 | அ14-30சி | |
| 16 | 29 | வெ | து51-25 | விசா22-15 | சித்60 | |
| 17 | 30 | சனி | திர57-13 | அனு29-43 | சித்60 | |
| 18 | 1 | ஞா | சது60-0 | கேட்36-35 | ம36-35அ | |
| 19 | 2 | திங் | ச○2-10 | மூல42-25 | சி42-25ம | |
| 20 | 3 | செவ் | பௌ6-10 | பூரா47-10 | சி47-10அ | |
| 21 | 4 | புத | பிர8-53 | உத்50-55 | அ50-55சி | |
| 22 | 5 | வியா | துதி10-28 | திரு53-23 | சித்60 | கிரகப்பிரவேசம் |
| 23 | ஜூலை 6 | வெ | திரி10-5 | அவி54-45 | சித்60 | சர்வமுகூர்த்தம் |
| 24 | 7 | சனி | சது10-10 | சதை55-5 | அ55-5ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 25 | 8 | ஞா | பஞ்8-23 | பூரட்54-25 | சி54-25அ | மந்திரம் ஜெபிக்க |
| 26 | 9 | திங் | சஷ்5-33 | உத்52-45 | சித60 | விவாகம், சீமந்தம் |
| 27 | 10 | செவ் | சப்1-48<br>அ57-5 | ரேவ50-8 | சித்60 | அவமாகம் |
| 28 | 11 | புத | நவ51-43 | அஸ்46-40 | ம46-40சி | சுபகாரியங்கள் விலக்க |
| 29 | 12 | வியா | தச45-30 | பர42-30 | சி42-30ம | மூலிகை உபயோகிக்க |
| 30 | 13 | வெ | ஏகா38-45 | கி✕37-45 | சி37-45ம | கிருத்திகை, அவமாகம் |
| 31 | 14 | சனி | து31-38 | ரோ32-35 | சித்60 | சனிப் பிரதோஷம் |
| 32 | 15 | ஞா | திர24-18 | மிரு27-23 | சித்60 | மாச சிவராத்திரி |

| செ | குரு | சுக் ராகு | புத சூரி |
|---|---|---|---|
| | 3-மே-செவ்<br>4-மிது-சுக்<br>29-கடக-சுக் | | |
| | சனி<br>கே | | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**15, VENKATESA MAISTRY ST., MADRAS.**